


நவம்பர் 5 உ முதல்
தமிழ்நாடெங்கும்
வெளிவருகிறது..





பானுமதி நடிக்கும்
பரணி

# லைலா மஜ்னு

தமிழ்



டைரக்ஷன் ராமகிருஷ்ணா
வசனம் எஸ்.டி.சுந்தரம்......

... ஜுபிடர் ரிலீஸ் ...

துணிகள்
துப்புரவாகவும்
வெண்மையாகவும்
சலவை செய்யப்
பட்டுள்ளன...

...அது!
ஸன்லைட் சோப்-
பினால்தான்!




துணிகளை அடித்துத் துவைக்காமலே வெண்மையாகச்
சலவை செய்கிறது

S. 115-172 TM

# ஜ்வரத்திற்கு பிறகு-



## ஓவல்ட்டின்

### பூர்ண குணம்பெற உதவுகிறது

ஜ்வரத்திற்குப் பிறகு நீங்கள் இழந்த பலத்தையும் ஆரோக்கியத்தையும் விரைவில் பெற "ஓவல்ட்டின்" அருந்த வேண்டும். இது தேகத்துக்கும் மூளைக்கும் உத்சாகமூட்டுகிறது. இதில் சத்துமிகுந்த பார்லி, பால், கோகோ, இயற்கைச் சத்துக்கள், வைட்டமின்கள் அடங்கியிருக்கின்றன.

"ஓவல்ட்டின்" எளிதில் ஜீரணமாகக் கூடியதால், ஜ்வரத்திற்குப் பிறகு அதை அருந்தினால் உங்களுக்கு மீண்டும் அசௌகரியம் ஏற்படாது.

இழந்த பலம் மீண்டும் பெற்று ஆரோக்கியம் காணுவீர்கள். ஜாக்கிரதை! போலிகளை வாங்காதீர்கள்.

# 'OVALTINE'

## 'ஓவல்ட்டின்'

### ஜ்வரத்திற்குப் பிறகு தகுந்த பானம்




டிஸ்டிரிப்யூட்டர்கள்:

கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிமிடெட், த. பெ. நெ. 1205, மதராஸ். மற்றும் பம்பாய், கராச்சி, கல்கத்தாவிலும் தி இங்கிலீஷ் & ஸ்காட்டிஷ் ஜாயிண்ட் கோவாபரேடிவ் ஹோல்சேல் சொஸைட்டி லிமிடெட், கண்ணிக்கோட்டை (மலபார் கோஸ்டுக்கு)

OV. 283

28 - 10 - 49 வெள்ளிக்கிழமை முதல்

சென்னை கெயிட்டி & ஸயானி மற்றும் தென்னிந்தியா முழுவதிலும்

ஸ்ரீ வெங்கடராமா பிக்சர்ஸ்

# பிரம்ம ரதம்



சென்னை நகருக்கும் தமிழ்நாடுக்கும் உரிமையாளர்:

**ஸ்ரீ அகஸ்தியா பிலிம் கம்பெனி**

57, கிடங்கு தெரு - ஜார்ஜ் டவுன் - சென்னை

தமிழ் நாட்டில்: தமிழ்நாடு டாக்கீஸ் வெளியீடு



# TUSSANOL for COUGHS and COLDS

அந்த நர்ஸுக்குத்தான் தெரியும்!

வைத்தியர்களால் பெரிதும் சிபாரிசு செய்யப்படும் டஸ்ஸனால் குழந்தைகள், பெரியவர்கள், இருமலுக்கு மிகவும் சிறந்த சஞ்சீவி. டஸ்ஸனால் ஜீரணிக்கக் கூடியது. ஹானியற்றது. ருசியானது. வேதனையளிக்கும் இருமல், கக்குவான், ஆஸ்துமா, மார்ச்சளி, நிமோனியா முதலியவைகளுக்கு சிறந்த மாற்று.




**TUSSANOL**

COUGH SYRUP

TB



## தலையில்

தலை மயிர் தெரிகிறதா, அல்லது அடித் தலை தெரிகிறதா? அடித் தலை புலப்படும் பக்ஷத்தில், உதிர்ந்த கேச ராசிகளுக்குப் பதில் புதுக் கூந்தல் முளைக்க வில்லை என்பது நிச்சயம். அச் சமயம் கேசவர்த்தினியைக் கொண்டு பரிஹரிக்காமல், பாதி வழுக்கையைப் பூரண வழுக்கை யாக விடுவானேன்? வழுக்கை யால் ஏற்படும் இழத் தோற்றத் தையும் அனுபவிப்பானேன்?

உதிர்ந்த இலைகள் மறுபடி முளைத்து விடும். ஆனால் சில சமயங்களில் உதிர்ந்த கூந்தல் சிகிச்சை யில்லாமல் முளைப்ப தில்லை. அச்சமயங்களில் கேச வர்த்தினியை உபயோகித்து மயிர் உதிர்வதை நிறுத்தி, இளம் கூந்தலையும் இளமையையும் ஒருங்கே பெறுங்கள்.

# கேசவர்த்தினி

கூந்தலைப் பாதுகாப்பது, விருத்தி செய்வது, அழகு படுத்துவது

**விலை அணா 14**

(மேல் செலவு வேறு)

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்:

**தென் இந்திய ரஸாயனசாலை**

**கிராஸ் கட் ரோடு, கோயமுத்தூர்**

## ஆர்டிஸ்டிக்-என்கிரேவிங்
## ஆப்டோன் - லயன்
## ட்ரைகலர் பிளாக்குகள்
## ரப்பர் ஸ்டாம்புகள்

முதலியவைகளுக்கு

# 86729

நம்பருக்கு

டெலிபோன் செய்யுங்கள்

அல்லது

**நேரில் ஒருமுறை விஜயம் செய்யுங்கள்**

★

# நியூடன்
## அண்டு கம்பெனி

80, வாலாஜா ரோடு

மவுண்ட் ரோடு - மதராஸ்

# கல்கி

## பொருளடக்கம்


மலர் 9 | இதழ் 13 | அக்டோபர் 30 | விரோதி ஐப்பசி 14




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும் சம்பவங்களும் கற்பனையே.

பந்தயத்தில் வெற்றி!





மலர் 9 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 13

# என்ன சேதி?

## நிலையற்ற கொள்கை

பிரான்ஸில் மந்திரி சபை எவ்வாறு நிலையற்று இருந்து வருகிறதோ அது போலவே பிரஞ்சு சர்க்காரின் கொள்கையும் நாளொரு விதமாக இருந்து வருகிறது. "பிரஞ்சு இந்தியப் பிரதேசங்களிலுள்ள முனிசிபல் சபைகளின் முடிவை ஏற்றுக் கொள்கிறோம்" என்று முதலில் பிரஞ்சு சர்க்கார் சொன்னார்கள். இந்தியாவுடன் சேருவதென்று சந்திரநாகூர் முனிசிபல் சபை தீர்மானித்தது. "அந்த முடிவை ஏற்க முடியாது; சர்வஜன வோட்டு எடுப்போம்" என்றார்கள். அப்படியே வோட்டும் எடுக்கப் பட்டது. சந்திரநாகூர் இந்தியாவுடன்தான் சேர வேண்டும் என்று சர்வ ஜனங்களும் வோட்டுக் கொடுத்தார்கள். எள்ளளவும் சந்தேகத்துக்கு இடமில்லாத அத்தகைய முடிவுக்குப் பிறகாவது பிரஞ்சு சர்க்கார் சந்திரநாகூர் உடனே இந்தியாவுடன் சேருவதற்கு ஏற்பாடு செய்திருக்க வேண்டும். அவ்வாறு செய்யாமல் அவர்கள் மாதக்கணக்கில் காலம் கடத்துவது ஒரு வல்லரசின் கௌரவத்துக்கு எவ்விதத்திலும் உகந்ததல்ல.

சில மாதங்களுக்கு முன் பிரஞ்சு இந்தியப் பிரதேசங்களில் நடந்த முனிசிபல் தேர்தல்கள் ஒழுங்காக நடைபெறவில்லை என்பது உலகம் அறிந்த உண்மை. அதை இந்திய சர்க்கார் எடுத்துக்காட்டவே பிரஞ்சு சர்க்கார் வேறு வழியின்றி சர்வஜன வாக்கெடுப்பு முறைக்கு இணங்கினார்கள். அடுத்த டிசம்பர் மாதம் சர்வஜன வாக்கு எடுப்பதென்றும் தேதி குறிப்பிட்டிருந்தார்கள். ஏற்கெனவே தகுந்த பார்வையாளர்களை அனுமதிக்காததால் முனிசிபல் தேர்தல்கள் ஊழலாக முடிந்ததுபோல, சர்வஜன வாக்கு எடுப்பும் முடியக்கூடாது என்று இந்திய சர்க்கார் வற்புறுத்தியதை பிரஞ்சு சர்க்கார் ஒப்புக் கொண்டார்கள். ஆனால், அவ்விஷயமாக இதுவரை பிரஞ்சு சர்க்கார் தகுந்த நடவடிக்கை எதுவும் எடுத்துக் கொள்ளவில்லை.

## ஒத்திவைப்பு நாடகம்

ஏற்கெனவே, பிரஞ்சு இந்திய முனிசிபல் சபைகளுக்குத் தேர்ந்தெடுக்கப் பட்ட அங்கத்தினர்கள் உண்மையான ஜனப் பிரதிநிதிகள் அல்ல என்ற அபிப்பிராயம் நிலவி வருகிறது. அப்படியிருக்க, மேற்படி அங்கத்தினர்கள் எல்லாரும் புதுச்சேரியில் கூடிச் சில தீர்மானங்களை நிறைவேற்றியிருப்பது விநோதமாக இருக்கிறது. பிரஞ்சு சர்க்கார் அளிக்க முன் வந்திருக்கும் சுயாட்சித் திட்டத்தை தாங்கள் அங்கீகரித்திருப்பதாயும், அதைப் பிரஞ்சு இந்திய ஜனங்களும் அங்கீகரிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்வதாயும் அவர்களுடைய தீர்மானங்கள் கூறுகின்றன. யாருக்கு யார் சுயாட்சி அளிப்பது என்பதே இப்போது கேள்வியாகும். பாஷை, பண்பாடு, பழக்க வழக்கங்கள், பூகோள அமைப்பு முதலிய சகல அம்சங்களிலும் இந்தியாவில் இந்தியப் பிரதேசங்களாக விளங்கும் புதுச்சேரி, காரைக்கால், மாஹி, ஏனாம் முதலிய நகரங்களில் வசிக்கும் ஜனங்களுக்குச் சுயாட்சி அளிக்க பிரஞ்சு சர்க்காருக்கு எவ்வித அதிகாரமும் இல்லை. அத்திட்டத்தை ஒப்புக் கொள்ளும்படி ஜனங்களுக்குச் சிபார்சு செய்ய முனிசிபல் அங்கத்தினர்களுக்கு உரிமையும் இல்லை.

முனிசிபல் அங்கத்தினர்கள் செய்துள்ள தீர்மானம் பிரஞ்சு இந்தியப் பிரதேச ஜனங்களிடையே மிகுந்த மனக் கொதிப்பை உண்டுபண்ணியிருக்கிறது. அவ்வாறு செய்தது தங்களுக்கு இழைக்கப்பட்டுள்ள பெரும் துரோகம் என்று அவர்கள் கருதுகிறார்கள். பிரஞ்சு ஆதிக்கம் நீடிக்கவும் பதவி வேட்டைக்காரர்களின் பதவிக் காலம் நீடிக்கவுமே சூழ்ச்சி நடந்து வருகிறது என்பதையும் பிரஞ்சு இந்திய தேசபக்தர்கள் சுட்டிக் காட்டியிருக்கிறார்கள். இவ்வாறு மகத்தான எதிர்ப்பு ஏற்பட்டு வருகையில், பிரஞ்சு சர்க்கார் அளிக்கும் சுயாட்சித் திட்டத்தை

ஜனங்கள் ஒப்புக் கொள்வார்களென்று நினைப்பது கேலிக் கூத்தாக இருக்கிறது.

எனவே, மேற்படி பிரதேசங்கள் இந்தியாவுடன் சேருவதா சேரவேண்டாமா என்பதை முடிவு செய்யும் பொறுப்பு அங்குள்ள மூன்று லட்சம் ஜனங்களைச் சேர்ந்தது. அவ்வாறு அவர்கள் முடிவு செய்வதற்கு உதவியாக சர்வஜன வாக்கு எடுப்பு ஊழல்களின்றி, தடி எடுத்தவன் தண்டல்காரன் என்ற விபரீதத்துக்கு இடமின்றி, பாரபட்சமற்ற பார்வையாளர்களின் முன்னிலையில் நடைபெறவேண்டும். அந்த முடிவைத் தவிர வேறெதையும் இந்திய சர்க்கார் ஏற்க மாட்டார்கள். அவ்விதமின்றி, பிரஞ்சு இந்தியப் பிரதேசங்கள் இந்தியாவுடன் ஐக்கியமடையும் நாளை ஒத்திவைத்துக் கொண்டே போகும் கபட நாடகம் வெற்றி பெறாது என்பது நிச்சயம்.

## இந்தியாவின் முன்னுதாரணம்

ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தில் முக்கியமான ஸ்தானத்தை வகிப்பது அதன் பாதுகாப்புச் சபையாகும். அந்தப் பாதுகாப்புச் சபையில் அமெரிக்கா, பிரிட்டன், ருஷ்யா, பிரான்ஸ், சீனா இந்த ஐந்து நாடுகளுக்கு மாத்திரமே நிரந்தரமான ஸ்தானங்கள் உண்டு. மற்ற நாடுகள் பிரதேசவாரியாகத் தேர்ந்தெடுக்கப்படும். தற்காலிகமாகத் தேர்ந்தெடுக்கப்படும் நாடுகள் ஒவ்வொரு வருஷமும் விலகும்போது, அவற்றின் ஸ்தானங்களில் வேறு நாடுகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பது ஏற்பாடு. மேற்படி சபையில் ஆசியா நாடுகளுக்குப் போதிய பிரதிநிதித்துவம் இல்லாததால் சென்ற வருஷம் அந்தத் தேர்தலில் இந்தியா கலந்து கொண்டது. இந்தியாவுக்குப் போட்டியாக யூக்ரேன் நின்றது. பல தடவை தேர்தல் நடந்தும் இரு நாடுகளும் வெற்றி பெறவில்லை. இரண்டில் ஒன்றுக்காவது மூன்றில் இரண்டு மடங்கு வோட்டுகள் கிடைக்காததே அதற்குக் காரணம். கடைசியாக, இந்தியா கண்ணியமாக விட்டுக் கொடுத்து உலக நாடுகளுக்கே ஒரு முன்னுதாரணமாகத் திகழ்ந்தது. ஏனெனில், சிக்கலான பிரச்னைகள் எழும்போது வல்லரசுகள் பரஸ்பரம் அவ்வாறு விட்டுக் கொடுக்குமாயின், போட்டியும் பிணக்கும் ஒழிய வழி பிறக்கும் அல்லவா?

## மகத்தான வெற்றி

இந்த வருஷத்திலே இந்தியா மறுபடியும் பாதுகாப்புச் சபைத் தேர்தலில் நின்றது. எந்த விஷயத்திலும் இந்தியாவுக்கு விரோதமாக நடந்து கொள்வதையே தன்னுடைய லட்சியமாகக் கொண்ட பாகிஸ்தான் மேற்படி சந்தர்ப்பத்தை உபயோகப் படுத்திக் கொள்ளத் தயங்கவில்லை. "பாதுகாப்புச் சபை உலக நீதிச் சபையாகும். அதிலுள்ள பிரதிநிதிகள் நீதிபதிகளைப் போன்றவர்கள். எனவே இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே பல பிரச்னைகள் தீரவேண்டியிருக்கையில் இந்தியா நீதிபதி ஸ்தானத்தில் 'இருப்பது ஒழுங்கல்ல" என்று ஜபருல்லாகான் தர்ம நியாயம் பேசினார். மேற்படி தேர்தலில் இந்தியாவை ஆதரித்து வோட் கொடுக்கக் கூடாது என்று மும்முரமாகப் பிரசாரம் செய்து கொண்டிருந்தார்.

பாதுகாப்புச் சபையில் குறிப்பிட்ட பிரச்னை பரிசீலனைக்கு வரும்போது அந்தப் பிரச்னையில் சம்பந்தப்பட்ட நாடுகளுக்கு வோட்டுக் கொடுக்க உரிமையில்லை. இந்த நியதியை ஜபருல்லாகான் அறியாதிருக்க முடியாது. எந்த விஷயத்திலும் போட்டியும் பிணக்கும் கொண்டுள்ள வல்லரசுகள் பாதுகாப்புச் சபையில் நிரந்தரமாக அங்கம் வகிக்கவில்லையா? பாலஸ்தீனப் பிரச்னை ஆலோசனைக்கு வந்தபோது அந்தச் சபையில் அரபு நாடுகள் இருக்கவில்லையா? இதையெல்லாம் ஜபருல்லாகான் அறியாதிருக்க முடியாது. அப்படியிருந்தும் அவர் இந்தியாவுக்கு விரோதமாகப் பிரசாரம் செய்தது அநியாயமான காரியம் என்பதை இப்போது ஐம்பத்தாறு நாடுகள் இடித்துக் காட்டியிருக்கின்றன.

பாதுகாப்புச் சபையில் நடந்த தேர்தலில் இந்தியாவுக்குச் சாதகமாக ஐம்பத்தாறு நாடுகள் வோட்டுக் கொடுத்தன. பாகிஸ்தான் உள்பட இரண்டே இரண்டு நாடுகள்தான் இந்தியாவுக்கு விரோதமாக வோட்டுக் கொடுத்தன. உலகத்திலே சமாதானமும் சாந்தியும் நிலவ வேண்டும் என்று அந்தரங்க சுத்தியுடன் விரும்பும் இந்தியா உலகப் பாதுகாப்புச் சபையில் இடம் பெற வேண்டியது அத்யாவசியம் என்பதை ஐம்பத்தாறு தேசங்களும் உணர்ந்து கொண்டதால் பாகிஸ்தானின் பிரசார வித்தை பலிக்கவில்லை.

---

அட்டைப்பட விளக்கம்

16-10-49 இதழிலிருந்து "கல்கி"யில் வெளிவரும் "கடல் கன்னி" என்னும் அரபிக் கதையில் வரும் ஒரு நிகழ்ச்சியை இந்த வாரத்துக் "கல்கி" இதழ் அட்டைப் படம் சித்திரிக்கிறது.

# நரகாசுரனின் கொண்டாட்டம்!

சென்ற பத்து வருஷ காலத்திலே பிரிட்டனிலுள்ள குழந்தைகளின் ஆரோக்கியம் ஆச்சரியகரமாக அபிவிருத்தி யடைந்திருக்கிறது.

இந்த உண்மையை பிரிட்டிஷ் ஆராய்ச்சி நிபுணர்கள் சமீபத்தில் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

எதிர்பாராத அத்தகைய நிலைமைக்குக் காரணம் என்ன?

சென்ற மகாயுத்தம் ஆரம்பமானதிலிருந்து இந்தியாவைக் காட்டிலும் பிரிட்டனில் ரேஷன் முறை வெகு கடுமையாக அமுல் நடத்தப்பட்டது.

எல்லா உணவுப் பொருள்களுக்கும் ரேஷன், உடைகளுக்கு ரேஷன், பூட்ஸ்களுக்கு ரேஷன், சிகரெட்டுகளுக்கு ரேஷன், மற்றும் வாழ்க்கைக்கு அத்தியாவசியமான எத்தனையோ சாதனங்களுக்கு ரேஷன்!

இவ்வாறாக, பிரிட்டன் முழுதும் ரேஷன் மயமாக இருந்தது. மின்சார விளக்குகளுக்குக் கூட விதிக்கப்பட்டிருந்த ரேஷன் சில வாரங்களுக்கு முன்தான் எடுக்கப்பட்டது.

முக்கிய உணவுப் பொருள்கள் மிக மிகச் சிக்கனமாகப் பகிர்ந்தளிக்கப்பட்ட காலத்தில் சிறுவர் சிறுமிகளின் ஆரோக்கியம் அபிவிருத்தி யடைந்தது என்றால் ஆச்சரியம்தானே?

பிரிட்டிஷ் சிறுவர் சிறுமியர் சாகலேட் போன்ற இனிப்புப் பண்டங்களை சதா சர்வகாலமும் தின்பது வழக்கம்.

சென்ற மகா யுத்தத்தின்போது அங்கு சர்க்கரைப் பஞ்சம் வந்ததால், அவர்களுக்கு இனிப்புப் பண்டங்கள் கிடைக்கவில்லை.

அதனாலேயே, அதாவது சர்க்கரை கலந்த பண்டங்களைச் சாப்பிடாததாலேயே அவர்களுடைய ஆரோக்கியத்தில் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது என்று கண்டு பிடித்திருக்கிறார்கள்.

சர்க்கரையை அதிகமாக உபயோகிப்பதால் பற்கள் சொத்தையாகி விடுகின்றன என்றும் பிரபல டாக்டர்கள் கூறுகிறார்கள்.

எனவே, அஸ்கா சர்க்கரை என்ற வெள்ளைச் சர்க்கரை ஆரோக்கியத்தைக் கொடுக்கும் உணவுப் பொருள்களில் ஒன்றல்ல என்பதுடன், ஆரோக்கியத்தைக் கெடுக்கும் சாதனங்களில் ஒன்று என்றாகிறது.

வாழ்க்கைக்கு அத்தியாவசிய மில்லாத இந்தச் சர்க்கரை இன்று இந்தியா முழுவதையும் அல்லோல கல்லோலப் படுத்தி வருகிறது! சர்க்காரைத் திணற அடித்து வருகிறது! ஜனங்களைத் துன்பத்திற்குள்ளாக்கி வருகிறது!

* * *

தீபாவளி யன்று "கங்கா ஸ்நானம் ஆய்விட்டதா?" என்று ஒருவருக்கொருவர் குசலப்ரச்னம் செய்து கொள்வது வழக்கம்.

ஆனால் இந்த வருஷம் தீபாவளிக் கொண்டாட்டத்தின்போது, "சர்க்கரை கிடைத்ததா?" என்றே ஜனங்கள் பரஸ்பரம் கேட்டுக் கொண்டார்கள்!

தீபாவளிக்கு முந்திய தினத்தில் சர்க்கரைக்காக ஜனங்கள் பட்ட கஷ்டத்தை வர்ணிக்க முடியாது.

சில இடங்களில் நிகழ்ந்த சர்க்கரைக் கலவரங்கள் சர்க்காரைக் கலங்க வைத்தன. பம்பாய், கல்கத்தா முதலிய நகரங்களில் போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்து ஜனக் கூட்டத்தைக் கலைக்கும்படி நேர்ந்தது.

அலைந்தும் திரிந்தும் மணிக்கணக்கில் வெய்யிலில் தவம் புரிந்தும் சர்க்கரை வாங்கியவர்கள், நரகாசுரனை ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா வதம் செய்த போது ஜனங்கள் எவ்வளவு குதூகலம் அடைந்திருப்பார்களோ அவ்வளவு குதூகலத்துடனும் வெற்றிக் கோலத்துடனும் இருந்தார்கள்!

அவ்வாறாக, சர்க்கரை பிளாக் மார்க்கெட் நரகாசுரனின் கொண்டாட்டம் இந்தியா முழுதும் கோடிக் கணக்கான மக்களைத் திண்டாட வைத்தது.

கோடிக் கணக்கானவர்கள் அவ்விதம் துன்பத்துக்கு ஆளாகும்படி நேர்ந்ததற்குக் காரணஸ்தர்கள் யார்?

தற்போது ஏற்பட்டுள்ள சர்க்கரைப் பஞ்சம் பற்றாக்குறை காரணமாக ஏற்பட்ட இயற்கையான பஞ்சம் அல்ல.

சிலவாரங்களுக்கு முன்வரையில் இந்த நாட்டில் சர்க்கரைப் பஞ்சம் ஏற்படும் என்பதற்கான அறிகுறியே எதுவும் இல்லை.

பல மாகாணங்களிலும் சர்க்கரைக் கையிருப்பு தாராளமாக இருந்தது.

சென்னை முதலிய இரண்டொரு மாகாணங்களில் கையிருப்பிலுள்ள சர்க்கரை தேங்கி விடக்கூடாது என்பதில் வியாபாரிகள் கவலை கொண்டிருந்தார்கள். அதன் காரணமாக, நியாயமான விலைக்குச் சர்க்கரையை விற்கத் தயாராக இருந்தார்கள்.

தேவைக்கு அதிகமான சர்க்கரையை இந்தியா பிரிட்டனுக்கு ஏற்றுமதி செய்யவும் தயாராக இருந்தது.

அப்படியிருக்க, திடீரென்று இந்தப் பாழும் பஞ்சம் ஏற்படுவானேன்?

தேவைக்கு அதிகமாக சர்க்கரை உற்பத்தியாகும் ஐக்கிய, பீகார் மாகாணங்களில் கூட சர்க்கரைப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறதென்றால், அது பற்றாக்குறை காரணமாக ஏற்படும் பஞ்சமாக இருக்க முடியுமா?

எனவே, இது பிளாக் மார்க்கெட் முதலாளிகள் சிருஷ்டித்துள்ள செயற்கைப் பஞ்சம் என்பது சந்தேகமின்றி வெளியாகிறது.

• • •

தற்போது ஏற்பட்டிருக்கும் நிலைமை சர்க்காருக்கோ, ஜனங்களுக்கோ புதிதல்ல.

பல பல மாதங்களுக்கு முன் காப்பிக் கொட்டையின் விலைக் கட்டுப்பாடு எடுக்கப்பட்டதும் அதன் விலை ஏறியதுடன், காப்பிக் கொட்டை திடீரென்று மாயமாக மறைந்து விட்டது.

அதன் விளைவாக, இப்போது சர்க்கரைக்குப் பஞ்சம் ஏற்பட்டிருப்பது போலவே காப்பிக் கொட்டைக்கும் பஞ்சம் ஏற்பட்டது. பல மாதங்களுக்கு முன் சிருஷ்டிக்கப்பட்ட காப்பிக்கொட்டைப் பஞ்சம் இன்னும் கூட முற்றிலும் தீர்ந்தபாடில்லை.

அந்தப் பஞ்சத்துக்கும் விலையேற்றத்துக்கும் எவ்வாறு காப்பி போர்டு என்ற முதலாளிகளின் குழு காரணமோ, அதுபோலவே இப்போது ஏற்பட்டுள்ள சர்க்கரைப் பஞ்சத்துக்கும் சர்க்கரை சின்டிகேட் என்ற முதலாளிகளின் கூட்டமே காரணம்.

அமெரிக்கா முதலிய நாடுகளில் காப்பிக்கொட்டை, சர்க்கரை விலைகளைக் குறைத்து காப்பி சாப்பிடுவோரின் தொகையை அதிகமாக்குவதன் மூலம் அந்த நாடுகளிலுள்ள முதலாளிகள் பெரும் லாபம் அடைகிறார்கள் என்று இந்தியா காப்பி போர்டைச் சேர்ந்த ஒரு பிரமுகரே சமீபத்தில் கூறினார்.

ஆனால், இந்தியாவிலுள்ள சில முதலாளிகளின் போக்கு அதற்கு நேர் மாறாக இருக்கிறது. இவர்கள் விலைகளை ஏற்றியும் பஞ்சத்தைச் சிருஷ்டித்தும் ஜனங்களைக் கசக்கிப் பிழிந்து ஒரு சில நாட்களில் கொள்ளை லாபம் தட்டுவதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்து வருகிறார்கள்.

காப்பிக் கொட்டைப் பஞ்சம் ஏற்பட்டதுபோல சர்க்கரைப் பஞ்சம் ஏற்பட்டதும் சர்க்கார் பழைய படிப்பினையை மனதில் கொண்டு தகுந்த முறைகளைத் தாமதமின்றிக் கைக்கொண்டிருக்கலாம்.

அவ்வாறு செய்திருந்தால், ஜனங்கள் எல்லோரும் நரக சதுர்த்தசிக்கு முதல் நாள் நரக வேதனையை அனுபவிக்கும்படி நேர்ந்திராது.

ஒருவேளை தீபாவளி வந்திராவிட்டால் ஜனங்களுக்குச் சர்க்கரை கிடைக்க இன்னும் எவ்வளவு காலம் ஆகியிருக்குமோ?

எனவே, கறுப்பு மார்க்கெட்காரர்களின் கொள்ளைப் புத்தியுடன் சர்க்காரின் திறமையின்மையும் சேர்ந்து கொண்டதால் ஜனங்கள் பரிதாபகரமாகக் கஷ்டப்பட நேர்ந்தது.

இனியாவது சர்க்கரைக்காகப் பொது ஜனங்கள் திண்டாடும்படி நேராமல், காலம் கடவாது தகுந்த நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டியது சர்க்காரின் முக்கிய கடமை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

சுதந்திர சர்க்காருக்கும் ஜனங்களுக்கும் துன்பத்தைக் கொடுக்கும் விரோதிகளில் பிளாக் மார்க்கெட்காரர்கள் தான் முதல் நம்பர் விரோதிகள் ஆவர். சர்க்கார்மீது பொது ஜனங்களுக்கு அதிருப்தியும் வெறுப்பும் ஏற்படும்படி செய்வதில் பிளாக் மார்க்கெட்டுக்காரர்களுக்கு இணையானவர் வேறு எவரும் இல்லை எனலாம்.

எனவே, அத்தகைய கொடுமையான பாதகர்களுக்கு எவ்வளவு கடுமையான தண்டனை விதித்தாலும் பொது ஜனங்கள் சர்க்காரை மனமார வாழ்த்துவார்கள்.

சில தினங்களுக்கு முன் கல்கத்தாவிலே உப்புக்குப் பஞ்சம் ஏற்படப் போகிறது என்ற வதந்தி திடீரென்று எங்கிருந்தோ முளைத்தது.

அவ்வளவுதான்! இரண்டு அணாவாக இருந்த உப்பு ஒரே நாளில் பன்னிரண்டு அணாவாக உயர்ந்து விட்டது!

சர்க்கரையைப்போல் உப்பும் கிடைக்காமற் போய் விடுமோ என்று ஜனங்கள் திகில் அடைந்தனர். சர்க்கரை இராமல் காலம் கடத்தலாம். ஆனால் உப்பு இல்லாமல் உணவை உட்கொள்ள முடியுமா?

உடனே ஜனங்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று அதிக விலை கொடுத்து ஏராளமாக உப்பை வாங்கிச் சேமித்து வைக்கத் தொடங்கினார்கள்.

மேற்படி வதந்தி பம்பாய் முதலிய இடங்களுக்கும் பரவியதால் அவ்விடங்களிலும் உப்பு வாங்குவதற்காகப் பதினாயிரக் கணக்கானவர்கள் கடைகளில் படையெடுக்க ஆரம்பித்தார்கள்.

அவ்விதம் ஒரே நாளில் வியாபாரிகளுக்குப் பதினாயிரக்கணக்கான ரூபாய் லாபம் கிடைத்தது.

நல்ல வேளையாக, உடனே சர்க்கார் தகுந்த முறைகளைக் கைக் கொண்டு ஜனங்களுக்குக் குறைந்த விலையில் உப்பு கிடைப்பதற்கு ஏற்பாடு செய்தார்கள்.

சர்க்கார் உடனே தகுந்த நடவடிக்கைகளைக் கைக்கொள்ளாமல் இருந்திருந்தால், கறுப்பு மார்க்கெட்காரர்கள் லட்சக்கணக்கில் லாபம் தட்டியிருப்பார்கள். ஜனங்கள் இன்னும் அதிகக் கஷ்டத்துக்கு ஆளாகியிருப்பார்கள்.

இறுதியில் விசாரித்த போது மேற்படி வதந்தியானது கறுப்பு மார்க்கெட் காரர்களின் மாய வித்தைகளில் ஒன்று என்பது தெரிய வந்தது.

அவ்விதமாக, கறுப்பு மார்க்கெட் காரர்களின் பணப் பேராசைக்கு ஜனங்கள் இரையாகும்படி நேருவது சகிக்க முடியாத அக்கிரமம் அல்லவா? அவ்வாறு இரையாகாமல் உடனடியாகப் பாதுகாப்பு அளிக்க வேண்டியது சர்க்காரின் கடமை அல்லவா?

• • •

கறுப்பு மார்க்கெட்காரர்கள் இவ்வாறு திடீர் திடீரென்று செய்யும் மாயா ஜால வேலைகளிலிருந்து ஜனங்கள் தங்களைத் தாங்களே காப்பாற்றிக் கொள்ள முடியாதா? "முடியும்" என்பதே நமது கருத்தாகும்.

அத்தகைய சந்தர்ப்பங்களில் சர்க்கார் தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொள்வார்கள் என்றோ, அல்லது தங்களுடைய நிலைமையை நொந்து கொண்டோ பொது ஜனங்கள் பேசாமல் இருந்துவிடக் கூடாது.

கறுப்பு மார்க்கெட்காரர்களின் கொட்டத்தை அடக்கும் சக்தி பொது ஜனங்களிடம் இருக்கிறது.

உதாரணமாக, சாக்கரைப் பஞ்சம் வந்துள்ள இந்தச் சமயத்திலே ஜனங்கள் தங்களுடைய சக்தியைக் காட்ட வேண்டும்.

சர்க்கரையானது அரிசி, கேழ்வரகு, கோதுமை போன்ற அவசியமான உணவுப் பொருள்களில் ஒன்றல்ல.

அதற்கு மாறாக, அது ஆரோக்கியத்தைக் கெடுக்கக் கூடியது என்பதை மேலே ஆதாரபூர்வமாகக் குறிப்பிட்டிருக்கிறோம்.

காப்பிக் கொட்டை, சர்க்கரை விலைகள் உயர்வதற்குத் தகுந்தவாறு ஹோட்டல்காரர்கள் தாங்கள் தயாரிக்கும் பண்டங்களின் விலைகளை உயர்த்த முடிவதில்லை.

கால நிலைமையை உத்தேசித்து அவர்கள் கொஞ்சம் உயர்த்தினாலும், ஹோட்டல்காரர்கள் கொள்ளை லாபம் அடிக்கின்றார்கள் என்ற கோஷம் கிளம்புகிறது.

முக்கிய சாதனங்களின் விலைகள் உயரும்போது அவர்கள்தான் என்ன செய்ய முடியும்?

எனவே, மகா ஜனங்கள் இந்த விவரங்களையெல்லாம் மனத்திற் கொண்டு யாரையும் குறை கூற முற்படாமல் வெள்ளைச் சர்க்கரையை உபயோகிப்பதில்லை என்று பிரதிக்ஞை செய்து கொள்ள வேண்டும்.

அவ்வாறு பிரதிக்ஞை செய்து கொள்ள முடியாதவர்கள் சர்க்கரையை மிகவும் குறைந்த அளவு உபயோகித்துக் கொள்ளவேண்டும்.

ரேஷன் கட்டுப்பாடு இல்லாத பொருள்களின் விஷயத்தில் ஜனங்கள் அவ்வாறு தங்களுடைய சக்தியை உபயோகிப்பார்களாயின் சர்க்காரின் முயற்சி யில்லாமலே விலைவாசிகள் குறைந்துவிடும் என்பதில் ஐயமில்லை.

மகா வல்லமை பொருந்திய பிரிட்டிஷாரைப் பணியவைத்து, உயிர் பொருள் எல்லாவற்றையும்விட மேலான சுதந்திரத்தைப் பெற்ற ஜனங்களின் மகத்தான ஆத்ம சக்திக்கு முன்னிலையில் கறுப்பு மார்க்கெட்காரர்களின் கண்ணு மூச்சி வேலைகள் பலிக்குமா?

★ ★ ★ நேருஜி பாஸ்டனில் வரவேற்கப்பட்டார். அவருடைய விஜயத்தைப்பற்றி பாஸ்டனிலிருந்து வெளிவந்திருக்கும் ஒரு செய்தி கூறுவதாவது: "சரித்திரப் புகழ் பெற்ற பாஸ்டன் டீ பார்ட்டி நடந்த இப் பழம்பெரும் நகரத்தில் பிரதம மந்திரி நேரு உற்சாகமாக வரவேற்கப்பட்டார்". பாஸ்டன் நகரத்தைப் பற்றிய வரலாறு கீழே கொடுக்கப் பட்டிருக்கிறது.

# பாஸ்டன் 'டீ பார்ட்டி'

சபரி

நேருஜிக்கு அமெரிக்காவில் மகத்தான வரவேற்பு நடக்கிறது.

மகா வீரர் அலெக்ஸாந்தரைப் போல, வெற்றி வீரர் ஜூலியஸ் ஸீஸரைப் போல ஜவாஹர்லால்ஜியின் திக்கு விஜயம் பிரமாதமாக நடக்கிறது.

சென்ற இடமெல்லாம் அவருக்குச் சிறப்பு நடக்கிறது. போகும் இடம் எல்லாம் அவருக்குப் புகழ்மாலை சூட்டப்படுகிறது.

அமெரிக்கா தோன்றி இதுவரை—அதாவது ஏறக்குறைய ஒரு இருநூறு ஆண்டுகளுக்குள் எந்த வெளிநாட்டுப் பிரமுகருக்கும் இத்தகைய மரியாதையும் கௌரவமும் அளிக்கப்பட்டதே இல்லை.

நேருஜி அமெரிக்காவின் தலைநகரமான வாஷிங்டனில் ஒரு வாரம் தங்கியிருந்தார். பிரஸிடெண்ட் ட்ருமன் உள்படப் பல ராஜ தந்திரிகளைச் சந்தித்துப் பேசினார். பிறகு நியூயார்க்குக்குப் போய்விட்டு, பாரத தேசத்தின் மாபெரும் விழாவாகிய தீபாவளி மகோற்சவத்தின்போது பாஸ்டன் நகரத்தை அடைந்தார்.

பாஸ்டன் நகரம் அமெரிக்க சுதந்திர சரித்திரத்திலே அழியாப் புகழ்பெற்ற நகரம். ஆங்கில அரசாங்கம் ஆதிக்க வெறி கொண்டு அமெரிக்க மக்களை அடக்கியாள முயன்றபோது, சுதந்திரச் சங்கை எடுத்து முதல் முதலாக ஊதிய நகரம் பாஸ்டன்.

பாஸ்டன் நடத்திய மேற்படி விடுதலைப் போராட்ட வரலாறு வீரம் மிகுந்தது.

• • •

அமெரிக்காவில் பிரிட்டனுக்கும் பிரான்ஸுக்குமிடையே ஆதிக்கப்போட்டி நடந்தது. அதில் பிரிட்டனுக்கு வெற்றி கிடைத்தது. பிரான்ஸ் தோற்றுப் போய் விட்டது.

பிரிட்டன் அடைந்த வெற்றி அமெரிக்காவுக்கு மிக்க குதூகலத்தை அளித்தது. அமெரிக்க மக்கள் சந்தோஷத்துடன் "நாம் சுதந்திர மடைந்து விட்டோம். அமெரிக்கா நம்முடையதாகி விட்டது!" என்றார்கள்.

அப்போது பிரிட்டிஷ் அரசனாக இருந்தவன் மூன்றாம் ஜார்ஜ்.

அவன் இதைக் கேட்டுச் சிரித்தான். "சுதந்திரமா? உங்களுக்கா? நன்றாக இருக்கிறது! அமெரிக்கா என்னுடையது. எனக்குத்தான் சுதந்திரம்" என்றான் இறுமாப்புடன்.

அமெரிக்க மக்கள் திகைத்தார்கள்.

அப்போது பிரிட்டனுக்குப் பணக் கஷ்டம் அதிகமாக இருந்தது. அதன் பொக்கிஷம் காலியாகக் கிடந்தது. என்ன செய்வதென்று யோசித்தான் ஜார்ஜ் மன்னன். அமெரிக்காவின் தலையில் கை வைப்பதென்று அவன் முடிவு செய்தான்.

பார்லிமெண்டில் ஸ்டாம்பு ஆக்ட் என்று புதிதாக ஒரு சட்டத்தை நிறைவேற்றினான். இதன் மூலம் நிறையப் பணம் கிடைக்கும் என்று அவன் மனப்பால் குடித்தான்.

அமெரிக்க மக்களுக்கு ஆத்திரம் தாங்க முடியவில்லை. அவர்களுக்கு பிரிட்டன் மீதும் ஜார்ஜ் அரசன் மீதும் கோபம் பொங்கியெழுந்தது.

அவர்களுடைய சீற்றத்தைக் கண்டான் ஜார்ஜ் மன்னன். அவன் தன் பிடிவாதத்தை விட்டுக் கீழே இறங்கி வந்தான். "ஓ! அப்படியா சேதி? ஸ்டாம்புச் சட்டம் வேண்டாம் என்கிறீர்களா? பூ, இவ்வளவு தானே? அதை எடுத்து விட்டால் போச்சு!" என்று சொல்லிவிட்டுச் சட்டத்தை உடனே ரத்து செய்தான்.

ஸ்டாம்புச் சட்டம் ஒழிக்கப் பட்டதை அமெரிக்க மக்கள் தங்களுக்கு ஒரு பெரிய வெற்றியாகக் கருதினார்கள்.

ஆனால், அந்த அநியாயச் சட்டம் ஒன்று ஒழிக்கப்பட்டு விட்டால் மாத்திரம்

போதுமா? இன்னும் எத்தனையோ அக்கிரமச் சட்டங்களும் அநியாய உத்தரவுகளும் இருக்கின்றனவே?

பிரிட்டிஷ்—பிரெஞ்சு யுத்தம் முடிந்த பிறகு, பிரிட்டிஷ் ராணுவம் அமெரிக்காவிலிருந்து போய்விடும் என்று அமெரிக்க மக்கள் எதிர்பார்த்தார்கள். ஆனால் அது போகவில்லை. பிரெஞ்சுக்காரர்களிடமிருந்து அமெரிக்க மக்களைக் காப்பாற்றுவது போல வந்த பிரிட்டிஷ் ராணுவம், பிறகு அமெரிக்க மக்களை அடக்கி யாள்வதற்காக அங்கேயே உட்கார்ந்து விட்டது. அதற்கு ஏற்படும் செலவை அமெரிக்க மக்களே கொடுக்க வேண்டும் என்று ஜார்ஜ் அரசன் கட்டாயப்படுத்தினான்.

அமெரிக்க மக்கள் முணு முணுத்தார்கள். அவர்களுக்கு அதிருப்தி உண்டாயிற்று. ஆனால் என்ன செய்ய முடியும்?

இதைத் தவிர பிரிட்டன் அமெரிக்க வர்த்தகத்தைக் கட்டுப்படுத்திப் பல சட்டங்கள் செய்திருந்தது.

இரும்பு, செம்பு, வெள்ளி முதலிய உலோகங்களையும் பருத்தி முதலிய மூலப் பொருள்களையும் அமெரிக்கா வேறு எந்த நாட்டுக்கும் விற்கவே கூடாது. பிரிட்டனுக்குத்தான் விற்கவேண்டும்.

அது மாத்திரமா?

கலப்பை, கத்தி, காண்டி முதலிய இரும்புச் சாமான்களை அமெரிக்கா உற்பத்தி செய்யக் கூடாது! அவற்றை பிரிட்டனிலிருந்துதான் இறக்குமதி செய்துகொள்ள வேண்டும்!

பிரிட்டிஷ் பார்லிமெண்ட் இதைப் போல இன்னும் பல சட்டங்களை நிறைவேற்றியது.

சுருக்கச் சொன்னால், இந்தியாவில் பிரிட்டன் என்ன செய்ததோ அதையே அமெரிக்காவிலும் செய்தது.

உள்நாட்டுக் கைத்தொழில்களை அழித்தது. பிரிட்டிஷ் சரக்குகளைத் திணிப்பதற்கு அமெரிக்காவை ஒரு மார்க்கெட்டாக உபயோகித்து வந்தது.

இதையெல்லாம் அமெரிக்கா பொறுமையாகச் சகித்து வந்தது. இத்தனையும் போதாதென்று ஸ்டாம்புச் சட்டத்தைப் புதிதாக நிறைவேற்றியவுடனேதான் அமெரிக்கா வெகுண்டு எழுந்தது.

* * *

ஸ்டாம்புச் சட்டம் ரத்து செய்யப்பட்ட பிறகு கொஞ்ச காலம் வரை நிலைமை அமைதியாக இருந்தது. ஆனால், ஜார்ஜ் அரசன் சும்மா இருக்கவில்லை.

பிரிட்டிஷ் வர்த்தகச் சட்டங்களை மீறி அமெரிக்கா திருட்டுத்தனமாக மற்ற நாடுகளுடன் வியாபாரம் செய்வதாக அவன் குற்றம் சாட்டினான்.

அது உண்மைதான். அமெரிக்கா அப்படித்தான் வியாபாரம் செய்து வந்தது. வெகு காலமாக அப்படிச் செய்துவந்தது. பிரிட்டிஷ் பார்லிமெண்ட் அக்கிரமமாக எப்போது வர்த்தகச் சட்டத்தை நிறைவேற்றியதோ அப்போதிருந்தே அமெரிக்கா திருட்டுத்தனமாக வியாபாரம் செய்து வந்தது. இது எல்லோருக்கும் தெரியும். ஜார்ஜ் மன்னனுக்குக் கூடத் தெரியும். இத்தனை காலமும் பேசாமலிருந்த அவன் இப்போது அதை ஆட்சேபித்தான். சட்டத்தைக் கடுமையாக அமுல் நடத்தும்படி அதிகாரிகளுக்கு உத்தரவிட்டான்.

இது அமெரிக்க மக்களுடைய கோபத்தை இன்னும் அதிகமாகக் கிளப்பியது. பிரிட்டன் மீது அவர்களுக்கு அளவுகடந்த வெறுப்பு உண்டாயிற்று.

பிரிட்டிஷ்-அமெரிக்க நிலைமையை இன்னும் மோசமாக்கத்தக்க விதமாக மற்றொரு சம்பவம் நிகழ்ந்தது.

ஒரு நாள் இரவு ஒரு பிரிட்டிஷ் சிப்பாய்க் கூட்டம் ஐந்து அமெரிக்க மக்களைச் சுட்டுக் கொன்று விட்டது. இதைக் கேள்விப்பட்டதும் பாஸ்டன் நகர மக்கள் கொதித்தெழுந்து ஓடி வந்தார்கள்.

“இப்போதே, இந்த நிமிஷமே நீங்கள் இந்தப் பட்டணத்தை விட்டு வெளியே போய்விட வேண்டும்” என்றார்கள் அவர்கள் சிப்பாய்களை நோக்கி.

அவர்களும் பயந்து போய் உடனே அதைவிட்டுக் கிளம்பிப் போய் விட்டார்கள்.

இதை ஜார்ஜ் மன்னன் கேள்விப்பட்டான். “அமெரிக்க மக்களுக்கு இவ்வளவு அகம்பாவமா?” என்று அவன் உறுமினான். கச்சையை வரிந்து கட்டினான். இரண்டில் ஒன்று பார்த்து விடுவது என்று முடிவு செய்தான்.

அப்போது பிரிட்டனில் ஏராளமாகத் தேயிலை குவிந்து கிடந்தது. அதில் ஒரு பகுதியை எடுத்து, அதன்மீது ஏராளமாக வரி விதித்து அதை அமெரிக்காவுக்கு அனுப்பி வைத்தான்.

“இதை நீங்கள் அவசியம் வாங்கித்தான் ஆகவேண்டும்” என்று அவன் அமெரிக்க மக்களைக் கட்டாயப் படுத்தினான்.

அமெரிக்கா யோசித்தது. பல நாட்கள் தீவிரமாக ஆலோசித்தது. கடைசியில் அது ஒரு முடிவுக்கு வந்தது.

தேயிலை ஏற்றி வந்த கப்பல்கள் பாஸ்டன் துறைமுகத்தை அடைந்தன. சரக்கை இறக்குவதற்காகக் கப்பல் வேலைக்காரர்கள் அவற்றைக் கீழே கொண்டு வந்தார்கள். அவ்வளவுதான்!

“இறக்காதே! இறக்காதே!” என்று ஒரு பெருங் கூச்சல்-காது செவிடும்படியான பெருங் கோஷம்—கிளம்பியது.

தேயிலைப் பெட்டிகளை அப்படியே கீழே போட்டு விட்டார்கள் கப்பல் சிப்பந்திகள். என்ன செய்வதென்று அவர்களுக்கு விளங்கவில்லை.

“அந்தக் குப்பை எங்களுக்கு என்னத்துக்கு? அதை இங்கிலாந்துக்கே திருப்பிக் கொண்டு போய் விடுங்கள்!” என்று கோஷமிட்டார்கள் பாஸ்டன் மகாஜனங்கள்.

பாஸ்டன் கவர்னருக்கு இந்தச் செய்தி எட்டியது. உடனே அவர் துறைமுகத்துக்கு விரைந்து வந்தார்.

“தேயிலைப் பெட்டிகளை நான் இறக்கியே தீருவேன்” என்று கர்ஜித்தார் அவர்.

“அதை நாங்கள் தடுத்தே தீருவோம்” என்றார்கள் பாஸ்டன் மக்கள் உறுதியாக.

இரண்டுக்கும் மத்தியில் கப்பல் சிப்பந்திகளின் பாடுதான் திண்டாட்டமாகிவிட்டது.

நாட்கள் ஒன்றன் பின்னொன்றாகக் கழிந்தன. கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சிய வண்ணம், இருந்த இடத்தைவிட்டு ஆடாமல் அசையாமல் அப்படியே இருந்தன. கவர்னருக்கு ஆத்திரம் தாங்க முடியவில்லை. பிரிட்டனுக்கும் பிரிட்டிஷ் மன்னருக்கும் இது ஒரு பெரிய அவமதிப்பு என்று அவர் கருதி மிகவும் மனம் புழுங்கினார்.

ஒருநாள் பிற்பகல். மணி மூன்று இருக்கும். போக்குவரத்து எதுவுமின்றி அமைதியாக இருந்த அந்தத் துறைமுகத்தில் ஒரு சிறு படகு மாத்திரம் துடுப்பை வீசிக் கொண்டு வேகமாகச் சென்றது. அமெரிக்கப் பழங்குடிகளான சிவப்பு இந்தியர்கள் பலர் அந்தப் படகில் இருந்தார்கள். அவர்கள் அடிக்கடி படகில் சென்று கடலில் மீன் பிடிப்பது வழக்கம். அதைப்போல இந்தப் படகும் மீன் பிடிக்கத்தான் போகிறதோ?

ஆம்,—இல்லை, இல்லை! தேயிலைக் கப்பல்களை நோக்கியல்லவா அது போகிறது?—அதோ தேயிலைக் கப்பல்கள் அருகே போய் விட்டது. ஒரு பயங்கரமான ஹூங்காரம்—பெரு முழக்கம்—கேட்கிறது. ஆபத்து! ஆபத்து! வந்துவிட்டது ஆபத்து! சிவப்பு இந்தியர்கள் படகை நிறுத்திவிட்டு, குதித்தேறிக் கப்பல்களுக்குள்ளே நுழைகிறார்கள். வரிசை வரிசையாக வரிசை வரிசையாக அங்கே அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் தேயிலைப் பெட்டிகளை எடுத்து வீசி வீசிக் கடலில் எறிகிறார்கள்! ஒன்று, இரண்டு, மூன்று! பத்து, இருபது, முப்பது, நூறு! ஆயிரம், பதினாயிரம்!

பொத்துப் பொத்தென்று ஒன்றன் பின் ஒன்றாகப் பெட்டிகள் கடலில் விழுந்தன.

காலி! எல்லாம் காலி! இனி ஒரு பெட்டி கூட இல்லை.

தேயிலைப் பெட்டிகளை இறக்க வேண்டிய சிரமத்தை அவர்கள் பிரிட்டிஷ் சிப்பந்திகளுக்குக் கொடுக்க வில்லை.

வேலை முடிந்ததும் அவர்கள் தங்கள் வேஷத்தை களைந்தெறிந்தார்கள். அவர்கள் சிவப்பு இந்தியர்கள் அல்ல என்பதும், மாறுவேஷம் தரித்த அமெரிக்க மக்கள் என்பதும் இப்போதுதான் பிரிட்டிஷ் கப்பல் அதிகாரிகளுக்கு விளங்கியது.

* * *

இவ்விதமாக அமெரிக்க சுதந்திரப் போராட்டத்துக்கு பாஸ்டன் துவஜாரோகணம் செய்தது. சுதந்திரப் பெரு நகரமாகிய பாஸ்டன் மூட்டிய விடுதலைத் தீ அமெரிக்கா முழுவதும் பரவியது. பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்குமிடையே கடும் போர் மூண்டது. பல ஆண்டுகள் யுத்தம் நடந்தது. முடிவில் அமெரிக்காவுக்கே வெற்றி கிடைத்தது.

அமெரிக்கா சுதந்திரக் குடியரசாயிற்று.

இருநூறு ஆண்டுகளுக்கு முன் நடந்த அந்தத் தேயிலைப் போராட்டத்தை அமெரிக்க மக்கள் “பாஸ்டன் டீ பார்ட்டி” என்று தமாஷாகக் குறிப்பிட்டார்கள்.

அமெரிக்க சுதந்திரத்துக்கு அடிகோலிய இவ்வீரப் பெரு நகரத்துக்கு விஜயம் செய்த நம்முடைய பிரதம மந்திரி ஜவாஹர்லால் ஜிக்கு அங்கு அமர்க்களமாகப் பல விருந்துகள் நடந்திருக்கின்றன.

உலக சரித்திரத்திலே பெரும் புலமை மிக்க நேருஜி மேற்படி விருந்துகளில் கலந்து கொண்டபோது, இருநூறு வருஷத்துக்கு முன்பு அங்கு நடந்த மேற்படி தேநீர் விருந்து — ‘டீ பார்ட்டி’ அவருக்கு நிச்சயமாக ஞாபகம் வந்திருக்கும்!

ஆனால், அது எப்பேர்ப்பட்ட விருந்து! எவ்வளவு பிரமாதமான விருந்து!

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

ரா.கி.

## 21. சுயராஜ்ய ஜுரம்!

நாகபுரி காங்கிரஸ் முடிவடைந்தவுடனே 1921-ம் வருஷம் பிறந்தது. பாரத மக்களைச் சுயராஜ்ய ஜுரம் பற்றிக் கொண்டது. ஜுரத்தின் வேகம் நாளுக்கு நாள் ஏறிக்கொண்டிருந்தது.

நாகபுரி காங்கிரஸில் ஒற்றுமையான முடிவு ஏற்பட்டதின் பயன் உடனே தெரிந்தது. கல்கத்தாவில் ஸ்ரீ சித்தரஞ்சன தாஸும் அலகாபாத்தில் பண்டித மோதிலால் நேருவும் வக்கீல் தொழிலை நிறுத்தி விட்டதாக அறிவித்தார்கள். ஸ்ரீ சித்தரஞ்சன் தாஸ் மாதம் ஒன்றுக்கு வக்கீல் தொழிலில் ஐம்பதினாயிரம் ரூபாய் சம்பாதித்த செய்தி நாடெங்கும் பிரசித்தமாயிருந்தது. அவர் அத்தொழிலை விட்டதைப் போன்ற தியாகம் உலக சரித்திரத்திலேயே கிடையாது என்று சொல்லலாம். அலகாபாத்தில் பண்டித மோதிலால் நேருவும் ஏராளமாகச் சம்பாதித்து வந்தவர். அத்துடன், பண்டித மோதிலால் நேரு அரசர்களெல்லாம் பொருமைப்படும்படியான சுகபோக வாழ்வு நடத்தி வந்தார் என்றும் மக்கள் அறிந்திருந்தார்கள். ஆகவே, மேற் கண்ட இரு தலைவர்களின் மாபெருந் தியாகம் பாரத மக்களின் உள்ளத்தைக் கவர்ந்து விட்டதில் வியப்பில்லை யல்லவா?

தாஸையும் நேருவையும் போலப் பிரபலமில்லாத பல வக்கீல்கள்,—நூற்றுக் கணக்கானவர்கள்,—தேசமெங்கும் தங்கள் தொழிலை விட்டு ஒத்துழையாமை இயக்கத்தைச் சேர முன்வந்தார்கள். இப்படி முன் வந்த வக்கீல்களில் ஏழைகளாயிருந்தவர்களுக்குப் பொருள் உதவி செய்வதற்காக வென்று ஒரு மனிதர் ஒரு லட்சம் ரூபாய் நன்கொடை அளித்தார்! அதற்கு முன்னால் இவ்வளவு பெரிய நன்கொடையைப் பற்றி யாரும் கேள்விப்பட்டதில்லையாதலால் தாஸ்—நேருவின் தியாகத்தைப் போலவே இந்த நன்கொடையும் மக்களைத் திகைக்கப் பண்ணியது. நன்கொடை அளித்தவரின் பெயர் சேத் ஜம்னாலால் பஜாஜ். இவர் மார்வார் தேசத்தில் பிறந்தவர். வியாபார நிமித்தமாக மத்திய மாகாணத்துக்கு வந்து வர்தாவில் குடியேறியவர். வர்த்தகத் துறையில் பெரும் பொருள் திரட்டிக் கோடீசுவரர் ஆனவர். இத்தகையவர் மகாத்மாவின் அந்தரங்கச் சீடர்களில் ஒருவரானார். அந்த வருஷத்திலிருந்து மரணமடையும் வரையில் காங்கிரஸ் மகா சபையின் பொக்கிஷதாராக விளங்கினார். முதல் லட்சம் கொடுத்த பிற்பாடு தேசத்துக்காக இன்னும் எவ்வளவோ லட்சம் கொடுத்தவர். பிற்காலத்தில் மகாத்மா சபர்மதி சத்தியாக்கிரஹ ஆசிரமத்தை விட்டு வெளியேற நேர்ந்தபோது வர்தாவுக்கு அருகில் ஒரு கிராமத்தில் ஆசிரமம் ஸ்தாபித்தது சேத் ஜம்னாலாலின் காரணமாகத்தான்.

* * *

புதிய அரசியல் திட்டத்தின்படி சட்டசபைகளை அங்குரார்ப்பணம் செய்து வைப்பதற்கு ஜார்ஜ் மன்னரின் சித்தப்பாவான கன்னாட் கோமகன் (டியூக் ஆப் கன்னாட்) விஜயம் செய்தார். அவருடைய விஜயத்தையும் விஜயம் சம்பந்தமான வைபவங்களையும் பகிஷ்காரம் செய்ய வேண்டுமென்று காங்கிரஸ் தலைவர்கள் கட்டளையிட்டார்கள். அதன்படியே கன்னாட் கோமகன் கப்பலில் வந்து இறங்கிய அன்று நாடெங்கும் ஹர்த்தால் நடந்தது. கன்னாட் கோமகன் இந்தியப் பொது மக்களுக்கும் தலைவர்களுக்கும் சமரசம் கோரி விண்ணப்பம் விடுத்தார். "நான் கிழவன்; வேண்டிக் கொள்கிறேன்; சென்று போனதை யெல்லாம் மறந்து மன்னித்து விடுங்கள்; புதிய அரசியல் திட்டத்தை ஏற்றுக் கொண்டு நடத்துங்கள்!" என்று மன்றாடினார். இந்த

விண்ணப்பம் செவிடன் காதில் ஊதின சங்காக முடிந்தது. அரசரின் பிரதிநிதி வேண்டிக் கொண்டதை மக்கள் பொருட்படுத்தவில்லை. காந்தி மகாத்மாவின் வாக்கையே சிரத்தையுடன் கேட்டார்கள். மாகாண சட்டசபைகளுக்கும் மாகாண மந்திரிகளுக்கும் மதிப்பே ஏற்படவில்லை.

* * *

மூவகை பகிஷ்காரங்களில் இன்னொன்று கலாசாலை பகிஷ்காரம் அல்லவா? நாகபுரி காங்கிரஸுக்குப் பிறகு இந்த பகிஷ்காரமும் ஓரளவு பலன் தந்தது. கல்கத்தாவில் தேசபந்து தாஸ் விடுத்த விண்ணப்பத்தின் பலனாக ஆயிரம், பதினாயிரம் என்ற கணக்கில் மாணாக்கர்கள் கலாசாலைகளை விட்டு வெளியேறினார்கள். மார்ச்சு மாதம் நடக்க வேண்டிய பரீட்சைகள் பல கலாசாலைகளில் நடைபெறவே இல்லை.

கல்கத்தாவைப் போல் அவ்வளவு அதிகமாக இல்லா விட்டாலும் மற்ற மாகாணங்களிலும் பல மாணவர்கள் கலாசாலை பகிஷ்காரம் செய்தார்கள்.

இவ்விதம் பள்ளிக்கூடங்களையும் கலாசாலைகளையும் விட்டு வந்த மாணாக்கர்களில் ஒரு பகுதியார் தேச சேவைக்கே தங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்தார்கள். முதலில் இவர்கள் காங்கிரஸ் பிரசாரத்தில் ஈடுபட்டார்கள். பிறகு கள்ளுக் கடை மறியல், விதேசித் துணிக் கடை மறியல், சாத்விகச் சட்ட மறுப்பு ஆகியவற்றில் ஈடுபட்டுச் சிறைக்கூடம் சென்றார்கள்.

வாலிபப் பிராயத்துக்குரிய ஆர்வத்துடனும் ஆவேசத்துடனும் தேசத் தொண்டில் ஈடுபட்ட இந்த ஆயிரக் கணக்கான மாணாக்கர்கள் பாரத நாட்டின் விடுதலைக்குப் பெரிதும் காரணமாயிருந்தார்கள்.

சர்க்கார் கல்வி ஸ்தாபனங்களை விட்ட மாணவர்கள் மேலே கல்வி கற்க விரும்பினால் அவர்களுக்கு வசதி இருக்க வேண்டும் என்பதற்காகத் தேசிய கல்வி ஸ்தாபனங்கள் சில ஏற்பட்டன. இவற்றில் குஜராத் வித்யா பீடம், காசி வித்யா பீடம், அலிகார் ஜமியா மிலியா ஆகியவை முக்கியமானவை.



பண்டித மோதிலால் நேரு

நாகபுரியின் மகாத்மா தயாரித்த புதிய காங்கிரஸ் அமைப்பு இப்போது வேலை செய்யத் தொடங்கியது. இதற்குமுன்னெல்லாம் ஜனங்கள் வருஷத்துக்கு ஒரு தடவை, — டிசம்பர் கடைசி வாரத்திலே தான், — காங்கிரஸைப் பற்றிப் பத்திரிகைகளிலே படிப்பார்கள். இப்போது தினந்தோறும் காங்கிரஸைப் பற்றிய செய்திகளைப் படிக்க நேர்ந்தது.

சென்னையில் வெளியான தினப் பத்திரிகைகளில் ஒவ்வொரு நாளும் ஒரு கட்டத்துக்குள்ளே ஒரு விண்ணப்பமோ, அறிக்கையோ வெளியாகி வந்தது. அதன் அடியில் "ச. இராஜகோபாலாச்சாரி, காங்கிரஸ் பொதுக் காரியதரிசி" என்று கையொப்பம் இட்டிருக்கும். நாகபுரியில் பண்டித மோதிலால் நேருவும் ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியாரும் காங்கிரஸ் மகாசபையின் பொதுக் காரியதரிசிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். தென்னிந்தியாவில் ஸ்ரீ ச. இராஜகோபாலாச்சாரியார் காங்கிரஸ் பிரசாரத்தைத் தீவிரமாக நடத்தத் தொடங்கினார். தினந்தோறும் பொது மக்களின் கவனம் காங்கிரஸ் திட்டங்களின் மீது செல்லும்படி பத்திரிகைகளில் அறிக்கை வெளியிட்டு வந்தார்.

காங்கிரஸ் காரியக் கமிட்டி ஒவ்வொரு மாதமும் கூடியது. நடந்த வேலைகளைப் பற்றி ஆராய்ந்து நடக்கவேண்டிய வேலைகளைப்பற்றித் தீர்மானித்தது.

நாடெங்கும் காங்கிரஸ் தலைவர்கள் சுற்றுப் பிரயாணம் செய்து மக்களின் உற்சாகத்தைப் பெருக்கி வந்தார்கள்.

காந்தி மகாத்மா மௌலானா முகம்மது அலி அல்லது ஷவுகத் அலியைத் தம்முடன் அழைத்துக் கொண்டு சுற்றுப் பிரயாணம் செய்தார். மகாத்மாவும் மௌலானாவும் போகுமிடங்களிலெல்லாம் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் திரண்டு வந்தார்கள். ஐம்பதினாயிரம், லட்சம் என்று ஜனங்கள் பொதுக் கூட்டங்களில் சேர்வது அவர்களுடைய சுற்றுப் பிரயாணத்தில் சர்வ சாதாரணமாயிருந்தது. அவர்கள் பிரயாணம் செய்யும்போது ரயில்வே

ஸ்டேஷன்களில் ஆயிரக் கணக்கான ஜனங்கள் கூடினார்கள். இரவு பகல் என்று பாராமல் தலைவர்களின் தரிசனம் கோரினார்கள். "வந்தே மாதரம்" "அல்லாஹு அக்பர்" "மகாத்மா காந்திக்கு ஜே!" என்ற கோஷங்கள் வானைப் பிளந்தன; ரயிலுக்குள் தூங்க முயன்ற தலைவர்களின் செவிகளையும் பிளந்தன.

இந்த சுற்றுப் பிரயாணத்தின்போது மகாத்மா ஒரு தடவை "நான் சொல்லும் நிபந்தனைகளை நிறைவேற்றினால் ஒரு வருஷத்துக்குள்ளே சுயராஜ்யம் தருவேன்!" என்றார்.

"நிபந்தனைகளை நிறைவேற்றினால்" என்பதைப் பலர் காதில் வாங்கிக்கொள்ளவில்லை. "ஒரு வருஷத்துக்குள் சுயராஜ்யம்" என்பதை மட்டும் பிடித்துக் கொண்டார்கள். "ஒரு வருஷத்துக்குள் சுயராஜ்யம்" என்னும் செய்தி மக்களிடையே பரவியது. "அவ்விதம் மகாத்மா வாங்கிக் கொடுக்கப்போகிறார்" என்ற நம்பிக்கையும் பரவியது. பொது மக்களின் சுயராஜ்ய ஜுரம் மேலும் மேலும் ஏறிக் கொண்டே சென்றது!

* * *

**மா**ர்ச்சு மாதக் கடைசியில் பெஜவாடாவில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூடியது. தலைவர்கள் தேசத்தின் நிலைமையை ஆராய்ந்து பார்த்தார்கள். "பட்ட பகிஷ்காரம், சட்டசபை பகிஷ்காரம், கோர்ட் பகிஷ்காரம், கலாசாலை பகிஷ்காரம்" ஆகியவைகள் எல்லாம் ஓரளவிலேதான் வெற்றி பெற்றிருந்தன.

பொது மக்களின் உற்சாகம் அளவில்லாமல் பெருகிக் கொண்டிருந்தது. ஆனால் பொங்கி வழிந்து வீணாகிக் கொண்டிருந்ததே தவிர அந்த உற்சாகம் காரியத்தில் பயன் படுத்தப் படவில்லை.

மக்களின் உற்சாகத்தைக்காரியமாக மாற்றுவதற்கு மகாத்மா காந்தி மூன்று திட்டங்களை வகுத்தார்.

"(1) ஒரு கோடி காங்கிரஸ் அங்கத்தினரைச் சேருங்கள்; (2) திலகர் சுயராஜ்ய நிதிக்கு ஒரு கோடி ரூபாய் சேருங்கள்; (3) தேசத்தில் இருபது லட்சம் இராட்டை சுற்றும்படி செய்யுங்கள்" என்று சொன்னார்.



ஸ்ரீ சித்தரஞ்சன தாஸ்

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி அந்தத் திட்டத்தை ஒப்புக் கொண்டது. ஜூன் மாதக் கடைசிக்குள் திட்டம் நிறைவேற வேண்டும் என்று தீர்மானித்தது.

இத்திட்டம் தேசமெங்கும் சுறுசுறுப்பை வளர்த்தது. திட்டத்தை நிறைவேற்றுவதற்குப் புதிய காங்கிரஸ் அமைப்பு மிகவும் உதவி செய்தது.

மாகாண காங்கிரஸ் கமிட்டிகளும், ஜில்லா காங்கிரஸ் கமிட்டிகளும், தாலுகா காங்கிரஸ் கமிட்டிகளும், கிராம காங்கிரஸ் சபைகளும் ஏற்பட்டன. மேற்படி கமிட்டிகளுக் கெல்லாம் காரியாலயங்கள் ஏற்பட்டன. அந்தக் காரியாலயங்களின் மீது நடுவில் இராட்டை பொறித்த மூவர்ணக் கொடி பறந்தது.

ஆங்காங்கு சர்க்கார் கச்சேரிகளுக்குப் போட்டியாகக் காங்கிரஸின் காரியாலயங்கள் ஏற்பட்டு வருவதாகப் பொது ஜனங்கள் எண்ணினார்கள்.

முரட்டுக் கதர்ச்சொக்காயும், வெள்ளைக் கதர்க்குல்லாயும் தரித்த தலைவர்களும் தொண்டர்களும் நாடெங்கும் சஞ்சரித்தார்கள். பட்டணங்களிலும் கிராமங்களிலும் காங்கிரஸ் மகாசபைக்கு அங்கத்தினர்களைச் சேர்த்தார்கள்.

காங்கிரஸ் இலட்சியம் அச்சிட்ட லட்சக் கணக்கான அங்கத்தினர் நமூனாக்கள் நாடெங்கும் விநியோகிக்கப்பட்டன.

புதிய அமைப்பின்படி, காங்கிரஸ் இலட்சியத்தில் கையெழுத்துப் போட்டு நாலணா வருஷ சந்தா கொடுப்பவர்கள் எல்லாரும் காங்கிரஸ் அங்கத்தினர்கள் அல்லவா?

நாலணாச் சந்தாவுடன் காங்கிரஸ் இலட்சியத்தில் கையெழுத்துக்கள் வாங்கப்பட்டன.

ஜூன் மாதக் கடைசிக்குள் அறுபது லட்சம் அங்கத்தினர்கள் சேர்ந்து விட்டதாகப் பின்னால் கணக்கு வெளியாயிற்று.

* * *

**நா**டெங்கும் உள்ள தச்சர்கள் கைராட்டினம் செய்யும் வேலையில் ஏவப்பட்



நாடக முனிவர் (ராவணனைப் பார்த்து):—உன் தலை சுக்கு நூறு கப் போகக் கடவது!

நாடக ராவணன் (கவலையுடன்):— ஐயோ! என் ஒன்பது பொய்த் தலைகளும் வெடித்துப் போனால் போகட்டும். நிஜத்தலை மட்டும் வெடிக்காம லிருந்தால் போதும்!

---

டார்கள். நூற்றுக் கணக்கிலும் ஆயிரக் கணக்கிலும் ராட்டினங்கள் செய்யப்பட்டன. பரண்களிலே கிடந்த பழைய இராட்டினங்கள் எல்லாம் எடுக்கப்பட்டன. கைராட்டினத்தின் ரீங்காரம் தேசமெங்கும் கேட்கலாயிற்று. பெஜவாடா திட்டத்தின்படி கிட்டத்தட்ட இருபது லட்சம் ராட்டினங்கள் ஜூன் முடிவுக்குள் வேலைசெய்யத் தொடங்கி விட்டதாகக் கணக்குச் சொன்னார்கள்.

இந்த ராட்டினங்களில் நூல் உற்பத்தி எவ்வளவு ஆயிற்று என்பதும், இவை நீடித்து வேலை செய்தனவா என்பதும் வேறு விஷயங்கள். அவற்றைக் குறித்துப் பிற்பாடு கவனிக்கலாம்.

* * *

காங்கிரஸ் அங்கத்தினர் எண்ணிக்கையும் கைராட்டினங்களின் தொகையும் நிச்சயமாகக் குறிப்பிட்ட தேதிக்குள் கணக்கிட முடியாதவை. ஆனால் திலகர் சுயராஜ்ய நிதி விஷயம் அப்படியல்ல.

வசூலித்த தொகைகளுக்கு அவ்வப்போது கணக்கு வந்தது. பணம் பாங்கில் சேர்ந்தது. ஆகையால் போட்ட திட்டம் நிறைவேறியதா என்பதை ஜூன் மாதம் 30உ நிச்சயமாய்ச் சொல்லி விடலாம்.

ஜனத்தொகை விகிதாசாரப்படி ஒவ்வொரு மாகாணத்துக்கும் ஒரு கோடியைப் பங்கிட்டு செய்து வசூல் வேலை ஆரம்பமாயிற்று. எல்லா மாகாணங்களிலும் துரிதமாகவே வசூல்வேலை நடந்து வந்தது. ஆனாலும் குறிப்பிட்ட பங்கீட்டின்படி ஒரு கோடி ரூபாய் வசூலாகும் என்று தோன்றவில்லை.

ஒரு பொது நிதிக்கு ஒரு கோடி ரூபாய் வசூலிப்பதென்பது அந்த நாளில் நினைக்கவும் முடியாத காரியம்.

அதற்கு முன்னால் பல தடவை காங்கிரஸுக்கு நிதி சேர்க்கும் முயற்சியை ஆரம்பித்துப் பலன் கிட்டாமல் கைவிட்டு விட்டார்கள். பத்தாயிரம் ரூபாய்க்கு மேல் காங்கிரஸுக்கு எப்போதும் கையிருப்பு இருந்ததில்லை.

அப்படியிருக்க, ஒரு கோடி ரூபாய் வசூல் ஆவது எப்படி? நடக்கக் கூடிய காரியமா?

பெரும்பாலான ஏழைகளிடம் கொடுக்கப் பணம் கிடையாது. பணக்காரர்களுக்குக் கொடுக்க மனம் கிடையாது. மனம் இருந்தாலும் காங்கிரஸ் நிதிக்குக் கொடுத்தால் சர்க்காரால் உபத்திரவம் நேரிடுமோ என்ற பயம் ஒரு பக்கம்.— இந்த நிலையில் ஒரு கோடி ரூபாய் வசூலாவது நடக்காத காரியம் என்று பலரும் எண்ணினார்கள்.

ஜூன் மாதம் 15உ வரையில் ஐம்பது லட்சம் ரூபாய்கூட வசூலாகவில்லை. சந்தேகப் பிராணிகளின் வாக்குப் பலித்து விடும் என்றே தோன்றியது.

ஜூன் மாதம் 15உக்கு மேல் ஆமதாபாத்தில் ஸ்ரீ வல்லபாய் பட்டேலும் பம்பாயில் மகாத்மா காந்தியும் பணம் வசூலிக்க ஆரம்பித்தார்கள்.

தினந்தோறும் ஐந்து லட்சம், பத்து லட்சம் என்று நிதி வசூல் பெருகிக் கொண்டு வந்தது.

ஆமதாபாத்தில் பத்து லட்சம் ரூபாயும் பம்பாயில் இருபத்தைந்து லட்சம் ரூபாயும் வசூலாயிற்று.

இந்தச் செய்திகள் மற்ற மாகாணங்களிலும் நிதி வசூலைப் பெருக்கின.

ஜூன் மாதம் 30உ முடிந்த போது மொத்தம் ஒரு கோடி பதினைந்து லட்சம் ரூபாய் சேர்ந்து விட்டதாகத் தெரிந்தது.

காங்கிரஸுக்கு மகத்தான வெற்றி. மகாத்மாவின் சக்திக்குத் திட்டமான சாட்சி. இந்தியாவின் தேச பக்திக்கு ஐயமில்லாத அத்தாட்சி.

திலகர் சுயராஜ்ய நிதிக்கு ஒரு கோடிக்கு மேலே வசூலாகி விட்டதென்னும் செய்தி நாடெங்கும் உற்சாகக் கிளர்ச்சியை உண்டாக்கிற்று.

பொது மக்களின் சுயராஜ்ய ஜுரம் இன்னும் அதிகமாகி மேலே ஏறியது!

# மதுவை ஒழிக்க உண்ணாவிரதம்

ரஜனி

கொழும்பு, அக்டோபர், 17

இலங்கையிலிருந்து ஏற்கெனவே இந்தியாவுக்குச் சென்ற இந்தியர்கள் இலங்கைக்குத் திரும்புவதில் புதிய சில சங்கடங்கள் மூண்டிருக்கின்றன. இங்குள்ள இந்திய ஹைகமிஷனர் காரியாலயம் இந்தியா போகும் இந்தியப் பிரயாணிகளுக்குச் சென்ற செப்டம்பர் பதினோராம் தேதியிலிருந்து 'போட்டோ பாஸ்' கொடுத்து வருகின்றது. அதற்கு முன்னால் 'ஈ' பாரம் என்று ஒரு சர்டிபிகேட்டு கொடுத்து வந்தது. போட்டோ பாஸ் வாங்கிச் சென்றவர்கள் இலங்கைக்குத் திரும்புவதில் கஷ்டமில்லை. 'ஈ' பாரம் வாங்கிச் சென்றவர்கள் இலங்கைக்குத் திரும்பும்பொழுது மண்டபத்திலுள்ள இந்தியக் குடியேற்ற அதிகாரியிடம் அதைக் காட்டிப் போட்டோ பாஸ் வாங்கலாமென்பது முந்திய ஏற்பாடு. இந்த தைரியத்துடனேயே நூற்றுக்கணக்கானவர்கள் 'பாரம்' வாங்கிக் கொண்டு இந்தியாவுக்குப் போனார்கள். ஆனால், இப்போது போட்டோ பாஸ் கொடுக்கும் அதிகாரத்தை மண்டபத்திலுள்ள அதிகாரிக்கு இந்திய சர்க்கார் அளிக்காததால் புதிய தொந்தரவு ஏற்பட்டுள்ளது.

'ஈ' பாரத்துடன் இந்தியா சென்றவர்கள் நவம்பர் முதல் தேதிக்கு முன்னால் இலங்கைக்குத் திரும்பிவிடுவதாயின் சங்கடமில்லை. நவம்பர் முதல் தேதியன்றோ அதற்குப் பிறகோ இங்கு வருவதானால் தங்களுடைய ஜில்லா மாஜிஸ்திரேட்டு மூலம் மாகாண சர்க்காருக்கு மனுக் கொடுத்து 'பாஸ் போர்ட்' வாங்கிக் கொண்டுதான் வர வேண்டும். அதனால் வீண் பணச் செலவும் காலதாமதமும் ஏற்படும். மண்டபத்திலுள்ள அதிகாரிகளுக்கே 'பாஸ்போர்ட்' கொடுக்கும் அதிகாரத்தை இந்தியா அரசாங்கம் அளிக்குமானால் இந்தியப் பிரயாணிகளுக்கு ஏற்படும் சங்கடங்களும் செலவும் தவிர்க்கப்படும்.

## பிரதம மந்திரி சமாதானம்

யாழ்ப்பாணத்தின் பல பாகங்களிலும் மதுபானத்தை ஒழிக்க ஒரு புதிய இயக்கம் ஆரம்பிக்கப்பட்டு வலுவடைந்து வருகின்றது. மன்னாரிலிருந்து பதினொரு மைல்களுக்கப்பாலுள்ள ஒரு கிராம ஜனங்கள் மதுபானத்தை ஒழிப்பதில் அகில இலங்கைக்கும் முன்மாதிரியாக இருக்கக் கூடிய நடவடிக்கைகளை எடுத்து வருகிறார்கள். அந்தக் கிராமத்தில் பல கள்ளுக் கடைகள் இருந்தன. கிராம அபிவிருத்திச் சங்கத்தின் கிளர்ச்சியினால் அந்தக் கடைகள் மூடப்பட்டு இரண்டே கடைகள் மட்டும் பாக்கியிருக்கின்றன. அவைகளையும் மூடிவிட வேண்டுமென்று சர்க்காரிடம் சங்கம் விண்ணப்பித்தது. இவ்விஷயத்தில் அரசாங்கம் நடவடிக்கை எடுக்காததால் அந்த இரண்டு கடைகளையும் மூடச் சாகும் வரையில் உண்ணாவிரதமிருப்பதென்று சங்க அங்கத்தினர்கள் தீர்மானித்திருக்கிறார்கள். உண்ணாவிரதத்தை ஆரம்பிக்கும் தேதி இன்னும் குறிப்பிடப் படவில்லை.

சென்ற வாரம் பிரதம மந்திரி சேனநாயகா தமிழர் பகுதியான மட்டக்களப்புக்கு விஜயம் செய்தார். அப்போது அவருக்கு வாசித்தளித்த வரவேற்புப் பத்திரமொன்றில் அரசாங்கம் சாராய உற்பத்தி செய்வதை நிறுத்த வேண்டுமென்றும், மதுபானத்தை முற்றிலுமோ அல்லது படிப்படியாகவோ தடை செய்ய வேண்டுமென்றும் கோரப்பட்டிருந்தது. இதற்குப் பிரதம மந்திரி பதிலளித்த பொழுது குடியின் கேடுகளை ஒப்புக் கொண்டார். ஒரு காலத்தில் மதுவை ஒழிக்கத் தாமே பிரசாரம் செய்ததாயும் அதே போல இன்னமும் பிரசாரம் செய்யத் தயாரென்றும் சொன்னார். ஆனால், மதுபானத்தைச் சட்டபூர்வமாகத் தடை செய்யத் தயாராயில்லை யென்றும், பொது ஜனங்களுக்கு மனமாற்றம் ஏற்பட்டு மதுவை ஒழிக்க வேண்டுமென்று ஏகோபித்துக் கேட்டால் மாத்திரமே சட்டமியற்ற முடியுமென்றும் இறுதியாகக் கூறிவிட்டார்.

## 'முக்கால் சம்பளம் வேண்டாம்'

இலங்கையிலுள்ள தோட்டங்களில் பல்லாயிரக் கணக்கான இந்தியத் தொழிலாளர்கள் சென்ற செப்டம்பர் மாதச் சம்பளம் வாங்கிக் கொள்ள மறுத்து விட்டார்கள். அவர்களுக்கு நியாயமான சம்பளம் கொடுக்கும் சட்டத்தை அரசாங்கம் ரத்து செய்த தென்றாலும் இந்தியர் குடியேற்றச் சட்டத்தின்படி தொழிலாளருக்கு

தினசரி ஒரு ரூபாய் நாற்பத்தொரு சதம் வீதம் சம்பளம் கொடுக்க தோட்ட முதலாளிகள் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஆனால் முழுநாள் சம்பளத்துக்குத் தொழிலாளர் வேலை செய்யவில்லையென்று சாக்குப் போக்குச் சொல்லித் தோட்ட முதலாளிகள் முக்கால் நாள் சம்பளமே கொடுப்பதால், அதை ஆட்சேபித்து, தொழிலாளர் சென்ற மாதச் சம்பளத்தை வாங்கிக் கொள்ள மறுக்கிறார்கள். இதே விஷயத்துக்காக இரண்டு பெரிய தோட்டங்களில் வேலை நிறுத்தமும் ஆரம்பமாகியிருக்கிறது. நிலைமை மோசமாகி வருவதை இலங்கை இந்திய காங்கிரஸ் தொழில் மந்திரிக்கு எடுத்துக் கூறியிருக்கிறது. மற்றும் தொழிலாளர் சட்டரீதியான ஒருநாள் சம்பளத்துக்கு, எவ்வளவு மரங்களில் பால் எடுக்க வேண்டும் என்பதைத் தெளிவாக நிர்ணயிக்க ஒரு விசாரணைக் கமிஷனை நியமிக்க வேண்டுமென்றும் வற்புறுத்தியிருக்கிறது.

## கோவில் நிர்மாணச் சிற்பிகள்

மன்னாரில் அழிந்து கிடக்கும் 3000 வருடப் பழமை வாய்ந்த திருக்கேதீஸ்வர ஆலயத்தைப் புனருத்தாரணம் செய்யப் பல பிரபலஸ்தர்கள் நடவடிக்கையெடுத்து வருவதாக இப் பகுதியில் ஏற்கனவே குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த ஆலயத்தைச் சைவ ஆகம விதிகளின்படி நிர்மாணிக்க இந்தியாவிலிருந்து கோவில் கட்டும் சிற்பிகளை வரவழைக்க வேண்டுமென்று திருக்கேதீஸ்வர ஆலயப் புனருத்தாரணக் கமிட்டியிடம் யோசனை சொல்லப்பட்டுள்ளது. கமிட்டி அங்கத்தினர்களில் ஒருவரான ஸ்ரீ எஸ். துரையப்பா சமீபத்தில் இந்தியாவுக்குச் சென்று பல நிபுணர்களையும் ராஜா ஸர் முத்தையா செட்டியார், ஸ்ரீ வி. வி. ஸ்ரீனிவாஸய்யங்கார் முதலான பல பிரமுகர்களையும் சந்தித்துப் பேசிவிட்டு வந்திருக்கிறார்.

## தாழ்த்தப்பட்டோர் பிரச்னை

இலங்கையில் தாழ்த்தப்பட்டோர் நிலைமையைப் பற்றி விசாரிக்கவும், அவர்களைக் கைதூக்கி விடவும் ஒரு கமிஷன் நியமிக்கப்பட வேண்டுமென்று பார்லிமெண்டில் சென்ற வாரம் ஒரு தீர்மானம் கொண்டு வரப்பட்டது. தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சட்டையணிந்து கொள்ளுவதற்கு அனுமதிக்கப்படுவதில்லையென்றும் இந்தமாதிரி அநீதியைப் போக்க சட்டமியற்ற வேண்டுமென்றும் எதிர்க்கட்சி அங்கத்தினர்களில் பலர் வற்புறுத்தினார்கள். ஆனால் சர்க்கார் இவ்விதச் சட்டமியற்றத் தயாராயில்லை. தீண்டாமையை ஒழிக்க வேண்டுமென்று பொது ஜனங்கள் ஏகோபித்துச் சொன்னால்தான் சட்டமியற்ற முடியுமென்று சர்க்கார் தரப்பில் கூறப்பட்டுள்ளது. பொது ஜன அபிப்பிராயம் ஏகோபித்துத் திரண்டுவிட்டால் பிறகு சட்டம் எதற்கு என்பதுதான் தெரியவில்லை!

# நடன அரங்கேற்றம்

1949ஆம் அக்டோபர் 8வ. சனிக்கிழமை மாலை 6 மணிக்கு சென்னை எழும்பூர் மியூஸியம் தியேட்டரில் "கல்கி" ஆசிரியர் ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் முன்னிலையில் ஸ்ரீ பி. ஆர். சாரி அவர்களின் குமாரி சுலோசனாவின் பரத நாட்டிய அரங்கேற்றம் நடைபெற்றது. மூன்று மணி நிகழ்ச்சிக்குப் பிறகு கல்கி ஆசிரியர் குமாரி சுலோசனாவின் நடனத் திறமையையும் குமாரி சுலோசனாவுக்கு நடனக் கலை கற்பித்த ஸரஸ்வதி கான நிலையத்தின் பிரின்ஸ்பால் ஸ்ரீமதி கே. லலிதாவையும் பாராட்டிப் பேசினார். இந்த அரங்கேற்ற விழா புரசை இந்திய இளைஞர் சங்கத்தின் ஆதரவில் நடைபெற்றது. சங்கத்தின் தலைவர் ஸ்ரீ கே. வேங்கடசாமி நாயுடுவும் ஸ்ரீமதி ராஜம் பாரதியும் குமாரி சுலோசனாவுக்கு வாழ்த்துக் கூறினர்.



# மோகினி துரைசாமி

ஸோமாஸ்

அன்று ஆபீஸிலிருந்து வீடு திரும்பிக் கொண்டிருந்த போது, "ஸார், ஆபீஸை விட்டுப் புறப்பட இவ்வளவு நாழிகை ஆகிறதா?" என்று ஒரு புதுக் குரல் கணீர் என்று எனக்குப் பின்புறத்திலிருந்து கேட்டது. நான் திடுக்கிட்டுத் திரும்பினேன். "என்ன ஸார்!" என்றார் அவர்.

அந்த ஆசாமி என் வீட்டுக்கு எதிரில் குடியிருந்தார். அங்கே அவர் குடி புகுந்து நாலைந்து மாதங்கள்தான் இருக்கும்.

"ஓ! நீங்களா? வாருங்கள்! சாதாரணமாக எங்கள் ஆபீஸில் மணிக்கணக்கே பார்ப்பதில்லை. வேலைதான் அவர்களுக்கு முக்கியம். வேலை முடிந்தால் சீக்கிரம் வந்து விடலாம். இல்லையென்றால் எத்தனை நேரம் ஆனாலும் வேலையை முடித்து விட்டுத்தான் வர வேண்டும்" என்று என் உத்தியோகத்தின் லட்சணத்தைப் பற்றிச் சொன்னேன்.

"ஆமாம். நீங்கள் அனேகமாக நேரங் கழித்துத்தான் வீடு திரும்புகிறீர்கள். நான் கவனித்திருக்கிறேன். நான் உங்கள் வீட்டுக்கு எதிர் வீட்டிலேதான் இருக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியுமோ என்னவோ!" என்றார் அவர்.

நான், "தெரியும். ஆனால் தங்களுடன் சம்பாஷிக்கும்படியான பாக்கியம் எனக்கு இதுவரையில் கிட்டவில்லை. நீங்கள் எந்த ஆபீஸில் வேலை பார்க்கிறீர்கள்?" என்று ஒரு கேள்வியையும் கேட்டு வைத்தேன்.

"ஏதோ உத்தியோகம் என்று ஒன்று வேண்டுமல்லவா? ஒரு இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியில் ஹெட் கிளார்க்காக இருக்கிறேன். அதெல்லாம் அந்தக்காலம். உத்தியோகத்துக்கு ஒரு 'மவுஸ்' இருந்தது. இந்தக் காலத்திலே யார் ஸார், இதையெல்லாம் மதிக்கிறார்கள்? உத்தியோகம் மாத்திரம் இல்லை, எல்லாத் துறையும் இந்தக் காலத்திலே மந்தமாகத்தான் இருக்கிறது. நிஜமான யோக்கியதையைக் கண்டு ஒருவனைப் பாராட்டுவதென்பதே இந்தக் காலத்திலே இல்லாமல் போய் விட்டது. நாடக மேடையை உதாரணமாக எடுத்துக் கொள்ளுங்கள். ஒன்றுக்கும் உதவாத ஆசாமிகளையெல்லாம் 'மேடைப் புலி,' 'நாடக கேசரி' என்றெல்லாம் பாராட்டுகிறார்கள். அந்தக் காலத்து இணையற்ற நடிகரான ஒரு மோகினி துரைசாமிக்கு இணையாக இந்தக் காலத்தில் ஒரு நடிகரைச் சொல்ல முடியுமா? ஸார், உங்களுக்கு மோகினி துரைசாமியைத் தெரியுமா?" என்று உணர்ச்சி பொங்கக் கேட்டார் அந்த ஆசாமி.

"மோகினி துரைசாமியா? தெரியவில்லையே, ஸார்!" என்றேன் திகைப்புடன்.

"என்ன! மோகினி துரைசாமியைத் தெரியாதா? கேள்விப்பட்டது கூடக் கிடையாதா? சரி, மன மோகன மதன விலாச நாடகசபா என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா?" என்று கேட்டபோது அவர் முகத்தில் வேதனைக்குறி படர்ந்தது.

"இல்லை, ஸார்! நான் நிரபராதி. எனக்கு இதெல்லாம் ஒன்றும் தெரியாது. மன்னித்து விட்டுக் கதையை மேலே சொல்லுங்கள்!" என்று அவரைத் தாழ்மையுடன் தூண்டினேன்.

அவர் திடுக்கிட்டுப் போய் விட்டார்; அவருக்குச் சினம் பொங்கி வந்தது.

"என்ன? உமக்கா மன்னிப்பு! அக்கிரமம்! மோகினி துரைசாமியையும் தெரியாது; மன மோகன மதன விலாச நாடக சபையையும் தெரியாது! என்ன ஆச்சரியம், ஸார்! நீர் மோகினி துரைசாமியின் நடிப்பைப் பாராமல், அந்த நாடக சபையைப் பற்றிக் கேள்விகூடப் படாமல் இத்தனை நாட்களாக என்ன செய்து கொண்டிருந்தீர்? அடே அப்பா! மோகினி துரைசாமி தன் இணையற்ற நடிப்பினால் எத்தனை ஆண்களைப் பைத்தியமாக அடித்திருக்கிறான், தெரியுமா? இப்போது அதை நினைத்தால் கூடப் பரவசம் உண்டாகிறது?" என்று கூறிவிட்டு அவர் உணர்ச்சி வசப்பட்டுச் சற்று நேரம் பேச முடியாமல் தவித்தார். அவர் கண்களில் நீர் முட்டியது. இப்பொழுது அவரைப் பார்த்தால் சினங்கொண்டு பேசியவராகவே தோன்றவில்லை.

"ஸார்!" என்று கணீர் என்ற குரலில் கூப்பிட்டு எங்களிடையே நிலவியிருந்த அமைதியை அவர் கலைத்தார்.

நான் "என்ன?" என்றேன்.

"ஒரு சமயம் மன மோகன மதன விலாச நாடக சபாவில் நாடகம் நடக்

கிறது. புராண சம்பந்தமான நாடகம். திருப்பாற் கடலை, தேவர்களும் அசுரர்களும் கடைந்து அமிர்தத்தை அடைகின்றனர். அதைப் பகிர்ந்து அளிக்கும் தொண்டை மோகினி மேற் கொள்ளுகிறாள். அந்தக் கட்டத்தில், மேடையில் மோகினி தோன்றினள். பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேண்டும். மோகினி சும்மா மேடையில் தோன்றி ஒரு புன்சிரிப்பை வீசின மாத்திரத்தில் மகா ஜனங்கள் செய்த கரகோஷம் வானைப் பிளந்தது!” என்று கூறி அவர் இந்த இடத்தில் சற்று நிறுத்தினார். அப்பொழுது அவர் மெய் சிலிர்த்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் முள்ளம் பன்றி மாதிரி எதற்காக உடம்பை உதறுகிறார்!

நான் இந்தச் சமயம் ஒரு சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள முயன்றேன்.

“ஸார், மோகினியாக நடித்தது யார்? நீங்கள் சொன்ன அந்தத் துரைசாமி தானே?”

இந்தக் கேள்வியை நான் கேட்டது தான் தாமதம். அவர் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. மீசை இருக்க வேண்டிய இடம் துடித்தது!

“என்ன கேள்வி கேட்டீர்கள்? வேறு யார் மோகினியாக நடிக்க முடியும்? மோகினி துரைசாமிதான் நடித்தார். அன்றைக்கு ஜில்லா கலெக்டர் நாடகத்துக்குத் தலைமை வகித்தார். தலைமை வகிக்கும் எல்லாப் பெரிய மனிதர்களையும்போலப் பாதி நாடகத்தில் அவர் எழுந்து செல்லவில்லை. நாடகம் முடியும் மட்டும் இருந்து கடைசியில் அற்புதமாகப் பேசினார். மோகினி துரைசாமியை அற்புதமாகப் பாராட்டினார். இன்னொரு விஷயம். நீங்கள் நம்பமாட்டீர்கள். பேச்செல்லாம் முடிந்ததும் கலெக்டர் நாடக மேடைக்குள் புகுந்து மோகினி வேஷத்துடன் இருந்த துரைசாமியை இறுகத் தழுவி ஆலிங்கனம் செய்து கொண்டார்.”

“இப்பொழுது உங்கள் துரைசாமி என்ன செய்கிறார்? சினிமாவில் நடிக்கிறாரோ?” என்று கதையை மேலே தொடரவிடும் நோக்கத்துடன் கேட்டேன்.

அவ்வளவுதான். அவர் முகம் மிகப் பயங்கரமாக மாறிவிட்டது. என்னை ஒரு அலக்ஷ்யப் பார்வை பார்த்தார்.

“என்ன ஸார்! சிங்கத்தை நரிக் கூட்டத்தில் சேர்க்கிறீர்களே! சேலம் மல்கோவாவை அசட்டு நார் மாம்பழத்துடன் ஒப்பிடுகிறீர்களே! காவிரி நதியைக் கூவம் நதியோடு சேர்க்கலாமா? பதினொரு வயதிலேயே மேடை ஏறிய சிங்கம் அல்லவா துரைசாமி! அவர் மற்ற சாதாரண ஆசாமிகளோடு சினிமாவில் நடிப்பாரா?”

நான் ஒன்றும் மறுமொழி கூறவில்லை. அவரை அதிசயத்துடன் பார்த்துக் கொண்டிருந்தேன். என்னை அறியாமலே என் கால்கள் நடந்து கொண்டிருந்தன. என் எதிர்வீட்டு நண்பர் ஆனந்த பரவசத்தில் தெருவில் போகிறவர்கள் வருகிறவர்களையெல்லாம் கொஞ்சம்கூடப் பொருட்படுத்தாமல் அவர் பாட்டுக்கு நடந்து கொண்டேயிருந்தார்.

“ஸார், ஒரு சமயம் பாருங்கள்! பிரஹ்லாதன் நாடகம் நடக்கிறது. இரண்யனை வதம் செய்ய நரசிம்மமூர்த்தி தூணிலிருந்து வெளிப்பட்டார். இரண்யனுக்கும் நரசிம்மமூர்த்திக்கும் கைகலப்பு ஏற்பட்டது. நாடக ஆரம்பத்திலிருந்தே ஜனங்களுக்கு இரணியனின் நடிப்பு ரஸிக்கவில்லை. ஆகையினால் நாடகக் கொட்டகையில் தரை மகா ஜனங்கள் ஒரே ‘கலாட்டா’ செய்ய ஆரம்பித்து விட்டார்கள். ‘நரசிம்மமூர்த்தி, இரண்யனை நீங்கள் ஒன்றும் செய்யவேண்டாம். தூக்கி இப்படி எங்களிடம் போட்டு விடுங்கள். நாங்கள் பார்த்துக் கொள்ளுகிறோம்!’ என்று ஒரு ரஸிகர் தெளிவான குரலில் பலமாகச் சொன்னார். அவ்வளவுதான். கொட்டகை அதிர்ந்து விழும்படி பலமாகச் சிரிப்பு ஒலி எழுந்தது!”

இந்த இடத்தில் அவரும் சிரித்தார்.

“அப்புறம்? நல்ல சுவாரஸ்யமான கட்டத்தில் நிறுத்திவிட்டீர்களே!” என்று கேட்டு அவர் சிரிப்பைக் கலைத்தேன்.



“இல்லை, ஸார்! இப்பொழுது நினைத்தால்கூடச் சிரிப்பு வருகிறது. பிறகு, மேடையில் திரை விழுந்தது. அமைதியை நிலைநாட்ட பபூன் மேடையில் தோன்றினான். அவனால் முடிந்த மட்டும் என்னென்னவோ சேஷ்டைகள் செய்து பார்த்தான். அவனை ஒருத்தராவது பொருட்படுத்த வேண்டுமே! ஊஹூம்! ஆனால் அதற்குப் பதிலாக அந்தக் காமெடியனின் பெயர் சொல்லி அழைத்து ‘செல்லப்பா! உள்ளே செல் அப்பா!’ என்று ரஸமாகச் சொல்லி அவனை உள்ளே அனுப்பி வைத்தனர்!”

“என்ன ஸார்! என்னத்தை யெல்லாமோ சொல்லுகிறீர்கள். மோகினி துரைசாமியைப் பற்றி.........!” என்று ஆர்வத்

துடன் நான் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, அவர் இடை மறித்தார்.

"அதைச் சொல்லத்தானே எதையெல்லாமோ சொல்லிக் கொண்டு வந்தேன்? உடனே திரை விலகியது. அடேயப்பா ஜனங்கள் எவ்வளவு நிசப்தமாயிருந்தார்கள் தெரியுமா? காரணம், மோகினி துரைசாமி காட்சி அளித்ததுதான்; இரணியனின் மனைவி லீலாவதியாக அவன் தோன்றினான். ஜனசமுத்திரம் அப்படியே தேன் குடித்த நரிமாதிரி பிரமித்துப் போய் விட்டது. எனக்கு அன்று நாடகம் நல்லபடியாக முடிந்து விடு போய்ச் சேரவேண்டுமே என்று ஒரே திகிலா யிருந்தது. கடைசியில் எனக்கு ஏற்பட்ட உற்சாகமும் சந்தோஷமும் சொல்லி முடியாது!" என்று சொல்லும் போது அவர் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருக்கெடுத்தது.

"இப்பொழுது அவர் எங்கே, என்ன செய்து கொண்டிருக்கிறார்? நாடகத்தில் நடிப்பதில்லையா?" என்று கேட்டேன்.

"இல்லை. இப்பொழுது அந்த நாடகக் கம்பெனியே இல்லை. மோகினி துரைசாமியும் தம் நடிப்புத் தொழிலை விட்டு விட்டார். சாதாரணக் குமாஸ்தாவாக ஊழியம் புரியத் தொடங்கி விட்டார். அவருடைய பெருந்தன்மையையும் கலை உள்ளத்தையும் கண்ட அந்தக் கம்பெனியின் சொந்தக்காரர் அவரைத் தலைமைக் குமாஸ்தாவாக நியமித்திருக்கிறார். என்னவோ பழையநாள் கதை...!!" என்றார்.

"அப்படியானால், தாங்கள் தானே அந்த......!" என்று ஆரம்பித்தேன்.

"இதில் சந்தேகம் என்ன? நானே தான் அந்த மோகினி துரைசாமி. அந்தக் காலத்தில் மோகினி துரைசாமியை ஒரு தடவையாவது நாடக மேடையில் பார்த்திருந்தீர்களானால் இப்படிப் பட்ட சந்தேகமே உங்கள் மனதில் உருவாகி யிருக்காது. ஆகா! அந்தக் காலம்...!" என்று கூறி உள்ளம் உருகினார்.

"மிஸ்டர் துரைசாமி, நீங்கள் கதை சொன்ன மாதிரியிலிருந்து என்னால் உங்கள் கதையைத்தான் நீங்கள் சொல்லுகிறீர்கள் என்று ஊகிக்க முடியவில்லை. கடைசிப் பகுதியைப் பற்றிச் சொன்ன போதுதான் கொஞ்சம் சந்தேகம் தலை காட்டியது!" என்றேன்.

உடனே அவர், "ஓகோ! நானே என் கதையைச் சொல்ல ஆரம்பித்தேன் என்று தெரிந்தால் நீங்கள் சுவாரஸ்யமாக ரஸித்துக் கதை கேட்பீர்களா? என்னுடைய பிரதாபத்தை நான் சொல்லாமல் வேறு யார் சொல்லுவார்கள்!



அப்பா! ஒன்று, நான் இங்கே வீட்டில் இருக்கிறேன்; நீங்கள் வயலுக்குப் போய் வாருங்கோ! இல்லாவிட்டால், நீங்கள் வயலுக்குப் போய் வாருங்கோ; நான் இங்கேயே வீட்டில் இருக்கிறேன்!

பிறர் பெருமையைச் சொல்லுகிற பாவனையில்தானே நமது பெருமையைச் சொல்ல முடிகிறது? என்ன ஸார், மடாலயங்களில் எல்லாம் செய்திகளை வெளியிடுகிறார்களே! 'ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அப்படி அபிப்பிராயப் படுகிறார்கள்' என்று மூன்றாவது மனிதர் கூறுவதுபோல் கூறும் நோக்கம் என்ன? மகா சந்நிதானத்தின் மகிமையை உயர்த்துவதுதான். அப்படி யிருக்க மோகினி துரைசாமியின் நடிப்புத் திறமையைப் பற்றி நான் சொன்னதில் தவறு என்ன இருக்கிறது?"

"தவறு ஒன்றுமில்லை. மோகினி துரைசாமியின் அபிப்பிராயம் ரொம்ப சரி என்று 'இவர்' கூறுகிறார்!" என்று என்னை நானே சுட்டிக் காட்டினேன்.

மோகினி துரைசாமி இப்போது எனக்கு ஆப்த நண்பராகிவிட்டார். "துரைசாமிக்கு இன்று உடம்பு சரியில்லை. துரைசாமி இன்று ஊருக்குப் போகிறார். துரைசாமிக்கு ஜாங்கிரி, ஸோமாஸ் என்றால் உயிர். துரைசாமியின் குழந்தைக்கு ஆண்டு நிறைவு" என்று அவர் கூறுவது சகஜமாகிவிட்டது. நானும் அவரைப் பார்த்து, "துரைசாமிக்கு உடம்பு எப்படியிருக்கிறது? துரைசாமி மருந்து சாப்பிட்டாரா? துரைசாமி இன்றைக்கு ஆபீசுக்குப் போவாரா? துரைசாமியிடம் ஐந்து ரூபாய் பணம் இருக்குமா?' என்று கேட்பதும் சகஜமாகிவிட்டது.

சரி, மோகினி துரைசாமி 'இவ'ரைக் கூப்பிடுகிறார். 'இவர்' போகிறார்!

# வட்ட மேஜை



## ★ ஜே ஹிந்த்!

இந்தக் கிராமத்தில் விளைவு நிலம் 200 ஏக்கர் நஞ்சை. இதற்கு சர்க்காருக்கு 1,100 கோட்டை நெல் அளந்திருக்கிறோம். இந்தத் தாலுகாவில் வேறு எந்தக் கிராமத்திலும் இந்த விகிதம் கொடுத்திருக்கவில்லை. அதாவது 200 ஏக்கரிலிருந்து அசலுக்குப் பெர்மிட் மூலம் போனது-கவர்ந்நலை உணவுக்கு நாத்தங்கால் இப்படி முறைப்படி கழித்துப் பார்த்தால் விவசாயிகள் தாங்களாகவே ஏக்கர் ஒன்றுக்கு 6-7 கோட்டை நெல் சர்க்காருக்கு அளந்திருக்கிறார்கள்.

இதில் என்ன வேடிக்கை என்றால் இன்னமும் இந்தக் கிராமத்தில் நெல் வேணுமென்றும் வீடு சோதனை போடவேண்டுமென்றும் கணக்குப் பிள்ளையிலிருந்து D. S. O. வரை படையெடுத்து வருவதுதான். இதில் அசங்கியமான விஷயம் சாதிப் பிரச்னை கூடத் தலை விடுவதுதான். ஒரு நாடார் ஒரு பிராம்மணன் வேளாளன் என்றெல்லாம் வேற்றுமைப் படுத்தி அந்தந்த அதிகாரிகளின் சாதியை வைத்து இந்தக் கொள்முதலில் ஜனங்களிடை விஷமூட்டப்படுவது மிக மிகப் பரிதாபகரமானது. இது நிற்க. லெவி முறையிலும் நெல் கொள்முதல் குறைந்து விடுமென்று பயமுறுத்துவது அதிகாரிகளின் சென்றகால நிகழ்ச்சி. நெல் வேண்டும் என்று நோட்டீஸ் கொடுத்து அந்த நபர் நெல் அளக்காவிட்டால் அவர் மேல் நடவடிக்கை எடுப்பதனால் நெல் வந்து விடாது. எனவேதான் ஏகபோக கட்டாயக் கொள்முதல் வேண்டும் என்பது அதிகாரிகளின் கூற்று. எனவே கண்ட இடத்தில் நெல்லை எடுப்பதுதான் பிரச்னை தீர வழி என்பது அவர்களின் சித்தாந்தம்.

தற்சமயம் "D" என்று போடுகிறார்கள். சாமர்த்திய விவசாயி தன் நெல்லைக் கறுப்பு மார்க்கட்டில் விற்றுவிட்டுத் தன் சாப்பாட்டு நெல்லையும் பதுக்கி விட்டு வீட்டைக் காலியாக வைத்திருப்பார். அவர் இந்தக் கொள்முதல் கொடுமையில் தப்பி விடலாம்.

தப்பிதம் செய்ய இடம் கொடாத மனச்சாட்சிக்கு அடிமைப் பட்டுப்போன அப்பாவி மிராசுதார் தனக்கு "D" உள்ளதைக் காட்டிலும் அரை மடங்கு அதிகமாக அளந்து விட்டு, தனக்கு விதைச் செலவுக்கென்றும், தர்மத்திற்கென்றும், குடும்பச் செலவுக்கென்றும் மூட்டை போட்டுப் பகிரங்கமாகத் தன் நெல் சேரில் வைத்திருப்பார். அதைப் பார்த்த அதிகாரிகள் தாளும் பென்சிலும் எடுத்துக் கூட்டல் கழித்தல் பெருக்கல் போட்டு நிதானித்து 10 மூட்டை அளக்கிறாயா என்று அதட்டுவார். இப்படி நெல் வசூல் செய்வது அதிகாரிகளுக்கு எளிது. லெவி முறை யென்றால் ஒவ்வொரு ஆசாமியிடமும் சென்று வயல் அறுவடையைக் கவனித்துக் கண்காணித்துக் கிராம முன்சீப்பே அந்தந்த நெல்லை அளந்து விட்டாரா என்று பார்த்து விடலாம். தாலுகாவுக்கு ஒரு ஆபீஸர் இருந்து செக் பண்ணினால் போதுமானது. தற்சமயம் ஒவ்வொரு கிராமத்திலும் என்ன வசூல் ஆகிறதோ இதையே வைத்துக்கூடக் கணக்கு நிர்ணயித்து ஏக்கருக்கு இவ்வளவு என்று கட்டிப் போட்டு விடலாம். கொஞ்சம் ஏக்கர் உள்ளவர்களுக்குக் குறைச்சலாகவும் நிறைய உள்ளவர்களுக்கு ஜாஸ்தியாகவும் போட்டு, அறுவடைக்கு 15 நாளைக்கு முன்னால் நோட்டீஸ் செலுத்தி விட்டால் லேசாக முடிந்துவிடும். வெள்ளைக்காரன் கவர்னராக இருந்தபொழுது கூட இப்படித்தான் நடந்தது. வீட்டுக்குள் நாய்கள் ஓடுகிற மாதிரி அதிகாரிகள் விரட்டுவது அந்த நாளிலும் இல்லை.

என்ன செய்கிறது? யாரிடம் சொல்கிறது? சென்னை சர்க்கார் உடனடியாக இதில் தலையிட்டு முடிவுகட்ட வேண்டும். ஏழை விவசாய கிராம மக்களுடைய துயரம் எல்லையைக் கடந்துவிட்டது.

நான் பொது வாழ்வில் ஈடுபட்டிருப்பதனாலும், அதே சமயத்தில் சர்க்கார் கொள்முதல் ஏஜண்டாக இருப்பதனாலும் நானே ஒரு விவசாயியாக இருப்பதனாலும் இப்பிரச்னை எனக்குச் சொல்ல முடியாத தலைவலியாயிருக்கிறது. தாங்கள் எடுத்துக் கூறி விரும்புவதுபோல இந்த நவம்பரிலேயே லெவி முறை வந்தால் பல்லாயிரக்கணக்கான விவசாயிகள் பிழைத்துப் போவார்கள். ஜே ஹிந்த் போடுவார்கள்.

விட்டலபுரம்
14—10—49 வெங்கடாச்சாரி



## இதுதான் குறைவோ?

ஈரோடு தாலுக்காவில் ஒரு ஏக்கருக்கும் குறைந்த நிலத்தின் கொள் முதல் டிமாண்டுக்கு மேலும் எனக்குத் தெரிந்த சில உதாரணங்களைக் கீழே தருகிறேன்.

நொளத்துப் பாளையம் புதூரில் இருக்கும் வேலாயம்மாளுக்கு உள்ள 50 சென்டுக்கு (அரை ஏக்கர்) 11 மணங்கு டிமாண்டும், (டி. லிஸ்ட் நெம்பர் 126) சென்னசமுத்திரம் மலைக்கொழுந்து செட்டியாருக்கு உள்ள 30 சென்டுக்கு 6 மணங்கும் (டி. லிஸ்ட் நம்பர் 211). 40 சென்டுள்ள ஆறுமுகத்திற்கு 15 மணங்கு டிமாண்டும் போட்டிருக்கிறார்கள்.

ஸ்ரீ குற்றாலலிங்கம் பிள்ளை அவர்கள் மூன்று ஏக்கராவுக்குக் குறைந்தவர்களிடத்தில் மிகவும் குறைவாகக் கொள்முதல் செய்வதாக மாகாண உணவுக் கமிட்டியிலே சொன்னார். ஆனால் மேலே கொடுத்துள்ள கணக்குப்படி பார்த்தால் விளைச்சலே டிமாண்டு அளவு இருக்க முடியாது.

இதுதான் இன்று கையாளும் நிர்க்கொள் முதலில் உள்ள கருணையும் நியாயமும்!

ஈரோடு
16.10-49 வ. கி. முத்துசாமி



## என்னே பாரதம்

அன்று நான் ஆபீசுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தேன். அப்போது என் மனைவி என்னிடம் தினம் சண்டைபோடுவது போலச் சர்க்கரை இல்லை யென்றும், தீபாவளி பண்டிகைக்கு இனிப்புப் பண்டம் செய்யவேண்டுமென்றும், ஆதலால் 1 வீசை சர்க்கரை வாங்கி வரச் சொன்னாள். அந்தோ! சர்க்கரை

விலையைக் கேட்ட மாத்திரத்தில் வயிறு கலங்குகிறது. என்னைப் போலொத்த ஒவ்வொருவரும் கலங்க வேண்டிய நியாயமிருக்கிறது. அந்தோ! என்னே மக்களின் அவலம்! 5 ரூபாய்க்கு ஒரு வீசை சர்க்கரை கிடைக்கவில்லையாமே! அப்படியாவது தீபாவளிக்கு இனிப்புப் பண்டம் செய்து சாப்பிடாவிட்டால் என்ன மூழ்கிப் போகிறது? இதற்கு என்ன செய்வதென்று யோசித்தேன். என்னுடைய ஆபீஸ் வேலையை நான்கு மணிக்கெல்லாம் முடித்துக் கொண்டு கடை வீதிக்குச் சென்றேன். அங்கு ஒரு கடையின் முன்பு ஒரே கூட்டமாக இருப்பதைக் கண்டு அது என்னவென்று அறிய ஆவல் கொண்டவனாய் அங்கு சென்றேன். அன்றுதான் தீபாவளிக்காகத் துணிகள் ஸ்பெஷல் கோட்டாவாக அளிக்கப்பட்டிருக்கிறதென்று அறிந்து உள்ளே சென்றேன். அங்கு ஒரு பச்சை ரக இங்கிலீஷ் வாயல் என் கண்ணைப் பறிக்கவே அதில் இரண்டு கெஜம் வாங்கி எடுத்துக் கொண்டு, வேறு எதையும் காதில் வாங்காமல், என் வீட்டை நோக்கி நடந்தேன். என் மனைவி என்னுடைய வரவை ஆவலுடன் எதிர்பார்த்தவளாய் வாசலில் நின்று கொண்டிருந்தாள். உள்ளே சென்று துணிப் பார்சலை என்னுடைய அறையிலேயே வைத்துவிட்டுக் கை கால்களெல்லாம் சுத்தம் செய்யப் பின்பக்கம் சென்றேன். என்னுடைய மனைவி பார்சல் இன்னவென்று தெரிந்து கொண்டு எனக்கு உபசாரம் செய்ய ஆரம்பித்தாள். நான் சர்க்கரை கிடைக்கவில்லையென்று ஒரே மூட்டையாய் விட்டேன். ஆனால் நான் எதிர்பார்த்தது போல் அந்தக் கேள்வியை அவள் கேட்காது போகவே நானே ஆரம்பித்து வைத்தேன். அதற்கு அவள் சர்க்கரை வேண்டாமென்று சொல்லக் கேட்டு எனக்கு ஆச்சரியமாயிருந்தது. என்ன காரணம் என்று ஆவல் கொண்டவனாய் நான் அதைக் கேட்பதற்குள் அவளே ''அவ்வளவு விலை கொடுத்து அதை எதற்கு வாங்குவது. காரப் பண்டம் பண்டிகைக்கு செய்து கொண்டால் போகிறது'' என்று சொன்னாள்.

வாணியம்பாடி
17—10—49 கா. எஸ். சீனிவாசன்

★

## சீனியும் வெல்லமும்

நடுத்தர வகுப்பார் சர்க்கார் உத்தரவால் படும் அவதிகள் சொல்லிமுடியாது. சாதாரணமாக சர்க்கார் சர்க்கரைக்கு விதித்த கண்ட்ரோல் உத்தரவுக்கு முந்தி வெல்லம் 40 பலம் கொண்ட வீசை ஒன்றுக்கு விலை ரூ. 0—12—0 ஆக இருந்தது. ஆனால் இப்பொழுது வீசை ஒன்றுக்கு ரூ. 1—10—0 ஆக இருக்கிறது. இத்துடன் பனைவெல்லமும் பனங்கற்கண்டும் ஒன்றுக்கு மூன்று மடங்கு விலை உயர்ந்து விட்டது. காரணம் சீனி கிடைக்கவில்லை என்பதே. சீனி கிடைக்கவில்லை என்று தெரிந்தவுடன் கொள்ளை லாபம் அடிக்கும் வியாபாரிகள், பொது ஜனங்கள் எப்படிப் போனாலும் பாதகம் இல்லை. நம் பெட்டியில் பணம் நிறைந்தால் போதும் என்று நினைத்து ஒன்றுக்கு மூன்று பங்கு அதிக விலை வைத்துப் பணத்தைக் கொள்ளை அடிக்கிறார்கள். நிற்க.

17—10—49-ம் தேதி சர்க்கார், ரேஷன் ஷாப்களில் 6 யூனிட்வரை உள்ள கார்டுகளுக்குக் கால் வீசையும் அதற்கு மேற்பட்ட கார்டுகளுக்கு அரை வீசையும் சப்ளை செய்யும்படி உத்தரவு அளித்தார்கள். ஆனால் அது என்னவாயிற்று என்றால் சீனி கண்ட்ரோல் வருமுன் மாதம் ஒன்றுக்கு அரைக்கால் வீசை சீனியைக்கூட வாங்காதவர்கள் ரேஷன் ஷாப்புகளில் வாங்கிய சீனியை வாங்கியவுடன், கொள்ளை லாபம் அடிக்கும் முதலாளியிடம் இவர்களே அதிக விலைக்குக் கொடுத்து விடுகிறார்கள். காரணம் இவர்களுக்கு சீனி தேவையில்லை என்பதே. இதற்குமுன் வியாபாரிகளிடம் மட்டும் கறுப்பு மார்க்கெட் என்று சொல்லப்படும் நோய் பரவியிருந்தது. ஆனால் கண்ட்ரோல் என்ற முறை வந்ததும் பொது ஜனங்களுக்கும் இந்தத் தொத்து வியாதி பரவி விட்டது.

மதுரை
22—10—49 நாகரத்தினம்

★

## தாமதிக்கக் கூடாது

எங்கள் திருச்சி ஜில்லாவிலே காங்கிரஸ் ஜில்லா போர்டு தேர்தலில் தோல்வி அடைந்துள்ளது. அதற்குக் காரணம் தானிய சேகரிப்பு முறையே. தேர்தலுக்குச் சில தினங்களுக்கு முன்தான் தானிய சேகரிப்புத் தடபுடல் நடந்தது. குத்தகைக்கு வாங்கி உழும் ஏழை மக்களின் இல்லங்களில் இருந்து ஆறு மரக்கால், ஒரு கலம் இருந்தால்கூட எடுத்துச் செல்லப்பட்டுள்ளது. இப்படி உள்ள அரசாங்கத்தை அவதூறு சொல்லாமல் மக்கள் எவ்விதம் இருக்க முடியும்? மேலும் காங்கிரஸ் கட்சியை வெறுக்கும் உத்தியோகஸ்தர்கள் மக்களிடம் இந்தச் சூழ்நிலையை உண்டாக்க இந்த தான்ய சேகரிப்பு முறையை உபயோகித்தார்கள். ''மஞ்சள் பெட்டியில் வோட்டுப் போட்டீர்கள். அதன் பலன் இது. ஏன்? ஜில்லா போர்டு தேர்தலிலும் போடுங்கள்'' என்று பரிகாசமும் கேலியுஞ் செய்தார்கள்.

---



முதல் ஆசாமி:-இராத்திரி கொஞ்சம் கூட தூக்கமில்லேங்க. ஒரே சத்தமாயிருந்தது!

இரண்டாவது ஆசாமி :—எனக்குச் சத்தம் ஒன்றும் கேட்கவில்லையே. என்ன சத்தம் அது?

முதல் ஆசாமி :—நீங்கள் குறட்டை விட்ட சத்தம்தான்.



முதல்வர்:—உங்கள் பையன் என்ன படித்துக் கொண்டிருக்கிறான்?

இரண்டாவது மனிதர் (அலுப்புடன்):—தினம் தினம் பத்திரிகைகளில் 'வாண்டெட்' காலத்தைப் படித்துக் கொண்டிருக்கிறான்!

---

குமார் பத்து ஏக்கரா நிலமுள்ள ஒருவர் டிமாண்டு நோட்டீசுக்கு மேலும் அளந்து குத்தகைக்காரரிடம் சில மூட்டைகள் வாங்கிக் கொடுத்தார். ஆனால் அவரிடம் இருந்தே, இரண்டு மாதங்கள் கழித்து, மேலும் பதினைந்து, இருபது மூட்டைகள் பிடுங்கப்பட்டன. அன்று அவரை உத்தியோகஸ்தர் சாப்பிடக்கூட விடவில்லை. ஆனால் அதே கிராமத்தில் இவரைப் போன்று பன்மடங்கு நிலமுள்ள, செல்வாக்குள்ள மிராசுதார் டிமாண்டு நோட்டீசுக்கும் பூரா நெல் கொடுக்கவில்லை. பிறரும் மற்றவர் கொடுத்ததில் கால் பங்கே கொடுத்தார். முதலில் கூறப்பட்டவர் ஜில்லா போர்டு தேர்தலில் மஞ்சள் பெட்டியில் வோட்டுப் போடுவாரா?

வேறு வரும்படி இல்லாத சாதாரண மிராசுதார்கள் நிலை என்ன? வயல் விளைச்சல் வேறு ஆறையால் பாதிக்கப்படுகிறது. இதைக் காரணம் கூறின் ஆபீசர் கடுபிடிதான் அதிகரிக்கும். சர்க்கார் கேட்டபோதெல்லாம் அளந்து விட்டு விதைக்கும், சம்பளத்திற்கும், சாப்பாட்டிற்கும் போக மீதியை விற்று மற்றச் செலவுகளைச் சரிக்கட்ட வேண்டும். மற்றவைகளின் விலைக்குக் கட்டுப்பாடு கிடையாது; நெல்லுக்கு உண்டு. இப்படி இருக்கும்போது பாடும், பணமும், துன்பமும், நஷ்டமும் கொடுக்கும் நெல்லை விளைவிக்க மக்கள் ஆவல் கொள்வதில்லை.

இவையெல்லாம் தானிய சேகரிப்பு முறையினால் ஏற்படும் விபரீதங்கள். தாங்கள் கூறுவதுபோல் 'லெவி முறையே' சிறந்தது. பாரபட்சம் இருக்காது. கிராம மக்கள் தாங்களே தங்களுக்குள் பேசிப் பங்கு போட்டுக் கொடுக்க வகை செய்கிறது. அதிகம் உள்ளவன் ஒளிக்க முடியாது. ஏனெனில் அவன் நிலை மற்றவர்களுக்குத் தெரியும். இவ்விதமேன்மையான முறை இருக்க சில சம்பளக் காரர்கள் பிரசாரம் செய்யவில்லை என நம் அமைச்சர்கள் இந்தக் குத்துமதிப்புக் கொள்முதல் முறையை அமுலுக்குக் கொண்டு வராமல் இருக்கக் கூடாது.

திருச்சி
22—10—49

அ. ரத்தினம்

★

## ★ நெசவோர் துயரம்

நூல் வினியோகம் ரேஷனில் செய்து கொடுக்கப்பட்ட காலத்தில் தொழிலாளி நூலுக்காகக் கடுமையான வெய்யிலிலும், மழையிலும் 'க்யூ' வரிசையில் கால் கடுக்க நின்று காத்திருப்பான். அவன் மனைவி அரிசிக் கடை முன் பூரண கர்ப்பத்துடன் நிற்கவும், உட்காரவும் முடியாமல் அவதிப்படுவாள். மகன் மண்ணெண்ணெய்க் கடையின் கூட்டத்தில் சிக்கி கூபன், பாட்டில், துட்டு ஆகியவற்றைத் தொலைத்துவிட்டு அழுதுகொண்டு வருவான். மகன் பள்ளிக்குச் செல்லுவதையும் விடுத்துத் தங்களுக்குக் கொடுக்கத் தவறிய சர்க்கரை ரேஷன் கார்டு பெறத் தாசில்தார் ஆபீஸுக்கு அலைந்து கொண்டிருப்பான்.

இப்போது நூல் ரேஷன் தொலைந்து, வேண்டிய நூலும் கிடைத்து வருகிறது. ஆனால் வேலை செய்தால் கூலிதான் இல்லை. உற்பத்தி விலைக்கும் குறைவாகக் கேட்கப்படுகின்றது. இவ்வூர் பத்து கோவாப்ரேடிவ் வீவர்ஸ் சொஸைட்டியிலும் கவர்ன்மென்ட் கலெக்டிங் வீவிங் ஸெண்டரிலும் கைத்தறித் துணி விற்பனையின்றி தேங்கிக் கிடக்கிறது.

நிதி மந்திரியார் வந்தபோது எங்கள் குறைகளைத் தமிழிலே எடுத்துரைத்தோம். அவருக்குப் புரிந்தோ, புரியாமலோ "உங்கள் குறைகளனைத்தையும் கூடிய சீக்கிரம் கவனிக்கப்படும். ஆயினும் சர்க்காரிடம் போதுமான பண வசதியில்லை" எனக் கையை விரித்தார். கூட்டுறவு மந்திரியார் வந்தபோது ஆங்கிலத்தில் எங்கள் குறைகளை எடுத்துரைத்தோம். பொறுமையுடன் செவி மடுத்ததுடன், "நீங்கள் யாவரும் கதர் நெய்யுங்கள்; உங்கள் பஞ்சம் தீர்ந்து விடும். உங்கள் ஆலோசனை என் நண்பர்களாகிய மில் முதலாளிகளைப் பாதிப்பதாகும். முதலாளிகள் சர்க்காருக்கும் பொது ஜனங்களுக்கும் நண்பர்கள். மில் துணி உற்பத்தியையோ, வெளிநாட்டுத் துணியையோ தடைவிதித்தால் அங்குள்ள தொழிலாளர்கள் கஷ்டப்பட மாட்டார்களா? கஷ்டத்தை நீங்கள் பொறுத்துக் கொள்ளுங்கள். அது தான் அஹிம்சை முறை" என்று உபதேசம் செய்துவிட்டு விரைந்து சென்று விட்டார், புதுக் கட்டிடத்தை வெள்ளிச் சாவியால் திறந்து வைக்க.

அந்தோ! நெசவு தொழிலாளர் துயரம் போக்க வழியுண்டா? சட்டசபையில் விவாதிக்க எங்களுக்கென மெம்பர் உண்டா? மந்திரியுண்டா? நிலைமை நீடித்தால் கண்ட கண்ட இடமெல்லாம் எலும்பும் தோலும், கையில் பிச்சைச் சட்டியும் கொண்ட உருவங்களை (நெசவுத் தொழிலாளிகளை) காணும்படி நேரும்.

"நெய்யும் தொழிலுக்கு நிகரில்லை" எனச் செப்பிய பொய்யா மொழியான பெரியோன், மொழியும் பொய்த்துவிட்டதா?

அருப்புக்கோட்டை
21—10—49

ஆர். எஸ். மணி

---

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ ஜே ஹிந்த்! என்ற கடிதம் எழுதிய விட்டலபுரம் ஸ்ரீ வெங்கடாச்சாரிக்கும், நெசவோர் துயரம் என்ற கடிதம் எழுதிய அருப்புக்கோட்டை ஸ்ரீ ஆர். எஸ். மணிக்கும் ரூ. 12-8 விதம் பிரித்து வழங்கப்பட்டது.

# படித்துப் பார்!

## வத்ஸலையின் வாழ்க்கை

கிழக்கு வங்காளத்தில் நடந்த வகுப்புக் கலகத்தில் எத்தனையோ யுவதிகளும், குழந்தைகளும், வயோதிக மாதர்களும் சொல்ல வொண்ணாத வேதனைகளுக்கும் கஷ்டங்களுக்கும் உள்ளானார்கள். அவர்களில் வத்ஸலையின் குடும்பமும் ஒன்று. வயது முதிர்ந்த தன் அன்னையைக் காண்பதற்காகப் போயிருந்த அவளைக் கலகக்காரர்கள் கைப்பற்ற முயற்சிக்கிறார்கள். அந்த வீரப் பெண்மணி எத்தனையோ இன்னல்களுக்கு மத்தியில் தப்பித்து ஓடிப்போய்க் கணவனை அடைகிறாள். இந்தச் சம்பவத்தை "சாவி" உணர்ச்சி மிக்க ஒரு கதையாக எழுதியிருக்கிறார். வங்காளத்தில் நடந்த வகுப்புக் கலகத்தின் பயங்கரத்தை இந்தக் கதை வெகு தெளிவாகவும் அழகாகவும் விளக்குகிறது. இதைத் தவிர இன்னும் நான்கு கதைகள் இந்தப் புத்தகத்தில் உள்ளன. அவற்றில் "இரகசியக் கடிதம்" என்ற கதையை முக்கியமாகக் குறிப்பிடவேண்டும். விலை ரூபாய் ஒன்று. விலாசம்: வாடாமலர்ப் பதிப்பகம், மாம்பலம், சென்னை 17.

## Swatantra (Annual 1949)

தீபாவளி வைபவத்தை யொட்டிப் பத்திரிகை யுலகத்திலே பல மலர்கள் மலருவது வழக்கமாகி விட்டது. ஸ்ரீ காஸா சுப்பாராவ் நடத்திவரும் 'சுதந்திரா' பத்திரிகையும் தீபாவளி சமயத்தின்போது ஒரு மலரை வெளிக்கொண்டு வந்திருக்கிறது. ஆனால் அது 'தீபாவளி மலர்' என்று பெயரிடப் படாமல் ஆண்டு மலர் என்ற பெயருடன் அடக்கமாக வெளிவந்திருக்கிறது. தீபாவளி மலரானால் என்ன, ஆண்டு மலரானால் என்ன? புஷ்பத்துக்கு என்ன பெயர் கொடுத்தால் என்ன? வாசனை இல்லாமலா போய்விடும்!

மலர் கச்சிதமாகவும் அழகாகவும் அமைந்திருக்கிறது. தேவி பிரசாத் ராய் சௌத்ரி எழுதிய படம் முகப்புப் பக்கத்தை அலங்கரிக்கிறது. உள்ளே புரட்டிப் பார்க்கும்போது, பொது வாழ்க்கையிலும் பத்திரிகை யுலகத்திலும் பிரபலமாக விளங்கும் பல பிரமுகர்கள் எழுதிய கதைகளையும் கட்டுரைகளையும் காண்கிறோம். ஸர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் எழுதியிருக்கும் Changing Human values என்ற கட்டுரை சிந்தனையைத் தூண்டுவதாக அமைந்திருக்கிறது. "நேஷனல் ஹெரால்ட்" பத்திரிகையின் புகழ்பெற்ற ஆசிரியராக விளங்கும் ஸ்ரீ செலபதிராவ் ஸ்ரீ வின்ஸ்டன் சர்ச்சிலின் தகுதியை விருப்பு வெறுப்பு இல்லாமல் ஆராய்ந்து எழுதியிருக்கும் கட்டுரை ரசமாக இருக்கிறது. ரமண மகரிஷியின் திருவுருவப் படம் வர்ணச் சித்திரமாகப் பொலிந்து கண்ணையும் கருத்தையும் கவருகிறது. இதைத் தவிர இன்னும் ஏராளமான படங்கள் பக்கத்துக்குப் பக்கம் காணப்படுகின்றன. ஸ்ரீ ஹரீந்திரநாத் சட்டோபாத்யாயா கவிதை எழுதி மலருக்குக் கவிதை இல்லாக் குறையை நீக்கியிருக்கிறார்.

"சுதந்திரா" மலர் தீபாவளி மலராக இல்லாவிட்டாலும் தீபாவளியன்று வெளிவந்த தீபாவளி மலர்களுக்குள்ளே சிறந்த மலராக விளங்குகிறது. விலை ரூ. 1–8–0 விலாசம்: "சுதந்திரா" காரியாலயம், லாயிட்ஸ் ரோட், ராயப்பேட்டை, சென்னை.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்

குறைந்த விலையில் பல சிறந்த நூல்களை அழகாக வெளியிட்டு சைவத்தையும் தமிழையும் பரப்புவதற்காக திருப்பனந்தாள் மடாலயத்தார் அருந்தொண்டு ஆற்றி வருவது எல்லோருக்கும் நன்கு தெரியும். கொஞ்ச காலத்துக்கு முன்பு அவர்கள் திருவாசகத்தை வெளியிட்டார்கள். இப்போது சுந்தரமூர்த்தி சுவாமிகளின் தேவாரத்தை, அப்பெருமானுடைய திருநாளாகிய ஆடிச் சோதியில் வெளியிட்டிருக்கிறார்கள். புத்தகம் வழக்கம்போல அழகாகவே வெளிவந்திருக்கிறது. ஒவ்வொரு பக்கத்துக்குக் கீழேயும் குறிப்புரை கொடுக்கப் பட்டிருக்கிறது. ஸ்ரீ சுவாமிகளுடைய வாழ்க்கை வரலாறும் சுருக்கமாகக் கொடுக்கப் பட்டிருக்கிறது. ஏறக்குறைய முந்நூறு பக்கங்கள் கொண்ட இவ்வழகிய வெளியீட்டுக்கு விலை ரூபாய் ஒன்றேதான். விலாசம்:—மானேஜர், குமரகுருபர சுவாமிகள் மடம், ஸ்ரீவைகுண்டம், திருநெல்வேலி ஜில்லா.

## காய்கறிப் பயிர்முறை

உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்ற கோஷம் நாலு திசையிலிருந்தும் கேட்கிறது. "இனி வெளி நாட்டிலிருந்து அரிசி கிடைக்காது" என்று நமது அரசாங்கம் எச்சரிக்கிறது. அரிசி உணவைக் குறைத்துக் கொண்டு காயும் கனியும் கிழங்கும் உணவில் சேர்த்துக் கொள்ளும்படி

ராஜாஜி, நேரு முதலிய நம் தலைவர்கள் கூறுவது மட்டுமின்றித் தாங்களே அவ்விதம் உண்டும் காட்டுகிறார்கள்.

இத்தகைய சூழ்நிலையில் **காய் கறிப் பயிர் முறை** என்ற அருமையான புத்தகத்தைக் கலைமகள் காரியாலயத்தார் வெளியிட்டிருப்பதை அவசியம் பாராட்ட வேண்டும்.

இந்நூலையும் ஸ்ரீ ச. கு. கணபதி ஐயர் அவர்களே எழுதியிருக்கிறார். தம் அனுபவத்தில் கண்ட உண்மைகளைத் தெள்ளத் தெளிந்த நடையில் எழுதியிருக்கிறார்.

தோட்டம் அமைக்க முன் கூட்டித் தெரிய வேண்டிய பல விவரங்களும், பின்னர் கீரை, கத்திரி, மிளகாய், தக்காளி போன்ற பயிர்களை எப்படிப் பயிரிட வேண்டும், அவற்றிலுள்ள உணவுச் சத்துக்களின் தன்மை என்ன முதலிய விஷயங்களையும் விவரமாக எழுதியிருக்கிறார்.

தோட்டக் கலையில் ஈடு பட்டவர்கள் இந்தப் புத்தகத்தைப் படித்துப் பயன் படுத்திக் கொண்டார்களானால், பாரதியார் அன்று கூறிய 'காயும் கனியும் கணக்கின்றித் தரும் காடு' என்ற வாக்கு வெகு சீக்கிரம் பலித்து விடும். விலை ரூ. 2—8—0; கலைமகள் வெளியீடு, மயிலாப்பூர், சென்னை.

## பரந்த அனுபவம்

சிக்கலில் கம்பியின்மீது நடப்பவனை விடச் சிரமப்பட வேண்டியிருக்கிறது இன்று நடுத்தர வகுப்பினர் வாழ்க்கையை நடத்துவதற்கு. வருவாயும் செலவும் தன்னைக் கட்டிக் கொண்டு போவது அவ்வளவு சிரம சாத்தியமாக இருக்கிறது.

இந் நிலையில் விருந்தாளிகள் வந்து விட்டால் ஆபத்து; உறவினர் இருக்கும் தெருவில் குடியேறி விட்டால் தொல்லை. இத்தகைய தர்மசங்கடமான நிலைகளிலிருந்து விடுபடப் பல அற்புதமான தந்திரங்கள் சொல்லித் தருகிறார் ஸ்ரீமான் பரந்த அனுபவம்.

இந்நூலில் உள்ள பன்னிரண்டு ஹாஸ்ய நாடகங்களிலும் பரந்த அனுபவம் தலையிட்டு உதவுகிறார். "நாடோடி"யின் அருமையான ஹாஸ்ய நாடகத்தொகுதி. விலை: ரூ. 4—0—0. விலாசம்: நாடோடி காரியாலயம், தியாகராயநகர், சென்னை.

## Mahatma Gandhi for the Millions

இமயத்தைக் காட்டிலும் உயர்ந்தவரும் கங்கை நதியைக் காட்டிலும் பரிசுத்தம் வாய்ந்தவருமான மகாத்மா காந்தியின் வாழ்க்கை மக்களுக்கு வழி காட்டி; அவர் வாக்கு உபதேசம். அத்தகைய உத்தமரின் வாழ்க்கைச் சரித்திரத்தைப் பள்ளி மாணவர்களும் படித்து உணரும்படியான எளிய ஆங்கில நடையில் கூறுகிறது இந்நூல். ஆங்கிலம் கற்ற வாலிபர்களுக்கு மிக்க உபயோகமாக இருக்கும். விலை ரூ. 1. விலாசம்: காந்திக் கிராமம், மதுரை ஜில்லா.

---

○ ● ○ ● ○

டில்லி யுனிவர்ஸிடி மண்டபத்தில் டாக்டர் அன்னி பெஸண்ட் அம்மையாரின் ஜனன தினக் கொண்டாட்டம் ராஷ்டிரபதி டாக்டர் பட்டாபி ஸீதாராமய்யாவின் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. அந்த விழாவில் 'ரமணீய கலா கேந்திரம்' மாணவிகள் நடனக் கச்சேரி செய்து சிறப்பித்தார்கள். குமாரி ரமணியின் நடனத் திறமையை டாக்டர் பட்டாபி ஸீதாராமய்யா பாராட்டி ஆசிகூறுகிறார்

● ● ● ● ○



# சித்திரலேகா




மொழி பெயர்ப்பு. ரா.வீ

ஆறாம் அத்தியாயம்

## குமாரகிரியின் குடிசையிலே!

சுவேதாங்கன் நேரே பீஜகுப்தன் இருக்குமிடத்தை அடைந்தான். போனதும் அவனுடைய காலடிகளிலே விழுந்து பணிந்து, "ஸ்வாமி, என்னைத் தண்டியுங்கள்!" என்று வேண்டிக் கொண்டான்.

சுவேதாங்கனின் செய்கை பீஜகுப்தனுக்கு விளங்கவில்லை. அவன் திகைத்துப் போய் சுவேதாங்கனின் கைகளைப் பிடித்துத் தூக்கி நிறுத்தி, "என்ன விஷயம்? எதற்காகத் தண்டனை?" என்று வினவினான்.

சுவேதாங்கன் நாத் தழுதழுக்க, "ஸ்வாமி, நான் ஒரு பெரிய அபசாரம் செய்து விட்டேன். தங்களுக்கு நம்பிக்கைத் துரோகம் இழைக்கும் மகா பாதகத்தைச் செய்யத் துணிந்து விட்டேன். தங்களைக் காதலிக்கும் ஒரு பெண்ணை—தாங்கள் காதலிக்கும் ஒரு பெண்ணை—அதுவும் எனக்கு எஜமானியாக விளங்கும் ஒரு பெண்ணை—நான் காதலிக்க முயன்றது மாபெரும் குற்றம் அல்லவா?" என்றான்.

பீஜகுப்தனுக்கு விஷயம் விளங்கிவிட்டது. அவன் மனதுக்குள் சிரித்துக் கொண்டே, "அவள் என்னைக் காதலிக்கிறாள் என்னும் விஷயம் உனக்கு எப்படித் தெரிந்தது?" என்றான்.

"அவளே இந்த விஷயத்தை என்னிடம் சொன்னாள்" என்று கூறும்பொழுது சுவேதாங்கனின் நாக்குத் தடுமாறிற்று. அப்பொழுது உடலிலே ஏதோ ஒரு உணர்ச்சி மின் அலைபோலப் பாய்வதையும் அவன் உணர்ந்தான். பிறகு, "ஸ்வாமி, இன்று அவளுடைய கையால் பானம் அருந்தி நான் என்னுடைய புலனடக்கத்தைப் புறக்கணித்துவிட்டேன். நான் காதலிக்கும் பெண்ணே தன் கையால் பானத்தைத் தந்தபொழுது என்னால் வேண்டாம் என்று சொல்ல முடியவில்லை!" என்று எப்படியோ சொல்லி முடித்தான்.

"அவள் உன்னிடம் என்னைக் காதலிப்பதாகச் சொல்லாமல், தன்னை உனக்கே அர்ப்பணிக்கத் தயாராகி விடுகிறாள் என்று வைத்துக் கொள். அப்பொழுது நீ என்ன செய்வாய்?" என்று கேட்டான் பீஜகுப்தன்.

"அவள் அப்படிச் செய்திருந்தால் நான் தங்களிடம் மன்னிப்புக் கோரவே வந்திருக்கமாட்டேன்; தங்களுக்குத் துரோகம் இழைத்து அந்த மாபெரும் குற்றத்தைச் செய்தே இருப்பேன்!" என்றான் சுவேதாங்கன்.

பீஜகுப்தன் தன் கையால் சுவேதாங்கனின் முதுகைத் தடவிக் கொடுத்து, "நீ என்னிடம் மன்னிப்புக் கோரவேண்டிய அவசியமே இல்லை. ஏனெனில் இம்மாதிரியான சூழ்நிலைகளில் நீ செய்வதைத்தான்

எந்த மனிதனும் செய்வான். ஆகவே, நீ செய்ததும் அல்லது செய்ய உத்தேசித்ததும் சரியே. உன் மீது யாதொருவிதமான குற்றமும் இல்லை. குற்றங்கள் எல்லாம் அந்தந்தச் சூழ்நிலையைச் சார்ந்தது. உன்னிடம் எனக்குச் சிறிதும் வருத்தமேயில்லை. நீ குற்றத்தை உணர்ந்து, யாருக்குத் துரோகம் செய்ய நினைத்தாயோ அவரிடமே அதைச் சொல்லி மன்னிப்புக் கோர முன் வந்ததில் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி. ஆனால் எனக்கு நம்பிக்கைத் துரோகம் இழைத்து விட்டதாக எண்ணுகிறாயே, அங்கேதான் நீ தவறு செய்கிறாய். இப்பொழுது தான் நீ இந்த உலகத்தில் பிரவேசித்திருக்கிறாய். உனக்கு உலகானுபவம் போதாது. உலகானுபவம் என்னும் உரை கல்லில் உன்னை உரைத்துப் பார்த்துக் கொள்ள இன்னும் பல சந்தர்ப்பங்கள் ஏற்படவேண்டும். அப்பொழுதுதான் செய்யத் தகுந்தது எது, செய்யத் தகாதது எது என்பதை நீ உணர்ந்து கொள்ள முடியும். உலகம் வெற்றியும் தோல்வியும் நிறைந்தது. உனது பழைய வாசஸ்தலமாகிய கானகம் அத்தகையதல்ல” என்றான்.

சுவேதாங்கனுக்கு அழுகை வந்துவிட்டது. “ஸ்வாமி, எல்லாம் செய்யச் சித்தமாயிருக்கிறேன். ஆனால் என்னுடைய குற்றத்துக்குத் தண்டனை கிடைத்தால்தான் என் மனம் நிம்மதியடையும்” என்றான்.

சுவேதாங்கனின் தலையைத் தன் கைகளால் தடவிக் கொடுத்தவாறே, “அழுவானேன், சுவேதாங்கா? எந்தக் குற்றத்துக்கு நீ தண்டனை வேண்டும் என்கிறாய்? நீ ஏதாவது குற்றம் செய்தால் அல்லவா உனக்கு நான் தண்டனை கொடுப்பதற்கு? செயலாகப் பரிணமிப்பதுதான் குற்றமேயொழியச் சொல்லளவில் இருப்பது குற்றமேயல்ல. செயலாகப் பரிணமிப்பதற்குச் சொல் ஒரு சாதனம்; அவ்வளவுதான். அதை நீ குற்றம் என்று எண்ணுவது சரியல்ல. இருந்தாலும் நீ தண்டனை வேண்டுமென்று சொன்னால், நான் உனக்கு ஒரே ஒரு தண்டனைதான் கொடுக்கமுடியும். எப்பொழுதும் போலவே இனியும் நீ சித்திரலேகாவை அவள் வீடுவரை கொண்டுபோய் விட்டு விட்டு வரவேண்டும்!” என்றான் பிரஜாபதன்.





விசாலதேவன் மாபெரும் ஆத்மஜோதியைக் குமாரகிரியிடத்திலே கண்டான். குமாரகிரியின் அறிவுக்கும் தேஜஸுக்கும் முன்னே அவன் அடி பணிந்தான். குமாரகிரியின் தர்க்கங்கள் அனைத்தும் ஆணித்தரமானவை. எதிர்வாதம் புரிந்து அவனை வெற்றி கொள்வது என்பது இயலாத காரியம். விசாலதேவனுக்கு எழும் சந்தேகங்களனைத்தையும் குமாரகிரி கணப்பொழுதில் அகற்றி வந்தான். சில நாட்களுக்குள்ளேயே அவன் யோகாப்பியாஸ முறைகளையும் விசாலதேவனுக்குக் கற்பிக்கத் தொடங்கி விட்டான். குமாரகிரிக்குத் தகுந்த சிஷ்யன் கிடைத்தது போலவே விசாலதேவனுக்கும் தகுந்த குரு கிடைத்தான்.

அன்றொரு நாள் குமாரகிரி உபாஸனையின் பெருமையைப்பற்றி விசாலதேவனுக்கு உபதேசித்துக் கொண்டிருந்தான். சூர்யாஸ்தமன சமயம். நிர்மானுஷ்யமான அந்தப் பிரதேசத்திலே குமாரகிரியின் குடிசையிலே மட்டும் விளக்கு 'மினுக், மினுக்' என்று எரிந்து கொண்டிருந்தது. திடீரெனக் குடிசையின் வாசலிலே காலடிச் சத்தம் கேட்டது. அந்தக் காலடிச் சத்தத்துடன் கூடவே, "வழி தவறி வந்த வழிப்போக்கர்களுக்கு இரவு மட்டும் தங்கிப் போக இடம் கிடைக்குமா?" என்ற குரலும் வந்தது.

"வழி தவறி வந்த யாருக்குமே இந்தக் குடிசை இடமளிக்கச் சித்தமாயிருக்கிறது" என்றான் குமாரகிரி.

அடுத்த கணம் ஒரு பெண் பின் தொடர ஆடவன் ஒருவன் உள்ளே நுழைந்தான்.

பெண்ணைப் பார்த்ததும் யோகி குமாரகிரி திடுக்கிட்டு, "அதிதி! உன்னுடன் ஒரு பெண்ணும் வந்திருப்பதாக நீ ஏன் என்னிடம் முன்கூட்டியே சொல்லவில்லை? உலகத்தை முற்றும் துறந்த துறவியின் குடிசை இது என்பது உனக்குத் தெரிந்திருக்க வேண்டாமா?" என்று கேட்டான்.

"ஸ்வாமி! இது யோகியின் குடிசை என்பது எனக்குத் தெரியாமல் இல்லை. ஆனால் ஐம்புலன்களையும் அடக்கி ஆண்ட யோகி, ஒரே ஒரு இரவு மட்டும் ஒரு பெண்ணுக்கு — அதுவும் ஆடவன் துணையுடன்

வந்திருக்கும் ஒரு பெண்ணுக்கு இடம் அளிக்கத் தயங்குவார் என்று நான் எதிர்பார்க்கவில்லை" என்று ஆடவன் வெகு பணிவாகச் சொன்னான்.

அந்தப் பதிலைக் கேட்டதும் குமாரகிரியின் முகம் சுண்டி விட்டது. அதற்குள் பெண் பக்கத்திலிருந்த ஆசனத்தில் உட்கார்ந்து விட்டாள்.



"அதிதி! நான் இந்தக் குடிசையில் ஒரு பெண்ணுக்கு இடம் அளிக்கத் தயங்கியதற்குக் காரணம் என்ன தெரியுமா? பெண்ணானவள் அந்தகாரத்துக்கு ஒப்பானவள்; மோகாந்தகாரத்தில் உழலுபவள்; மாயை வசப்பட்டவள்; இச்சைகளைத் தூண்டி விடுபவள். அறிவு சுடர் விட்டுப் பிரகாசிக்கும் இடத்திலே அவளுக்கு இடம் கிடையாது—சரி, அது எப்படியாவது போகட்டும். இன்று நீங்கள் இருவரும் என்னுடைய அதிதிகள். உங்களிருவரையும் போற்றி உபசரிக்க வேண்டியது என்னுடைய கடமை" என்றான் குமாரகிரி.

அதுவரை வியப்புடனும் திகைப்புடனும் அவர்களுடைய சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த அதிதிப் பெண் "ஒளியில் மதிமயங்கிய விட்டில் பூச்சிக்கு இருள் தனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறது" என்றாள் கிண்டலாக.

குமாரகிரி அயர்ந்து போய் அந்தப் பெண்மணியைக் கூர்ந்து கவனித்தான். அப்பப்பா! என்ன அழகு! என்ன அழகு! அவனுடைய கண்கள் ஆச்சரியத்தினால் அகல விரிந்தன. அவன் தன்னுடைய வாழ்நாளில் அம்மாதிரி அழகான பெண்ணைப் பார்த்ததே இல்லை. எனினும், அவன் அவளுக்குப் பதில் சொல்ல விரும்பாமல் ஆடவனைப் பார்த்து, "என் குடிசைக்கு விஜயம் செய்திருக்கும் அதிதிகளை அறிமுகம் செய்து கொள்ளும் உரிமை எனக்கு உண்டல்லவா?" என்று கேட்டான்.

"ஸ்வாமி! அடியேனின் பெயர் பீஜகுப்தன். பாடலிபுத்திரத்தின் சிற்றரசர்களுள் ஒருவன். பக்கத்தில் இருக்கிறாளே, இவள் பாடலிபுத்திர நகரத்திலே இணையற்று விளங்கும் நடனராணி. இவள் பெயர் சித்திரலேகா!" என்றான் அவன்.

"பீஜகுப்தனும் சித்திரலேகாவுமா?" என்று கேட்ட குமாரகிரி சித்திரலேகாவின் பக்கம் திரும்பி, "நடன ராணி! இனிமையிருந்த உனது சொல்லிலே விஷத்தின் கசப்பல்லவா கலந்திருக்கிறது! உன்னுடைய உள்ளத்திலே ஊறிக் கிடக்கும் நஞ்சை உன் அழகல்லவா மறைத்திருக்கிறது! என்ன இருந்தாலும் நீ என் அதிதி. உன்னை ஆசீர்வதிக்க வேண்டியது என்னுடைய கடமை. கடவுள் உனக்கு நற்புத்தி அருளுவாராக!" என்றான்.

சித்திரலேகா புன்னகை புரிந்தாள். அவளுடைய புன்னகையிலே மனதை மயக்க வல்ல மந்திரசக்தி நிரம்பியிருந்தது. "யோகி! பழம் பெரும் காவியங்களிலே பாட பேதம் என்றிருப்பது போல, நற்புத்தி என்ற சொல்லுக்கும் பொருளிலே பேதம் உண்டு. அன்பில் உள்ள இன்பம்தான் பிரிவிலே துயரம் என்று மாறுகிறது. தாங்கள் கூறிய நற்புத்தி என்னும் சொல்லுக்கு என்ன அர்த்தமோ?" என்று கேட்டாள்.

அன்புக்கு அடிமை செய்யும் அழகி, வைராக்கியத்துக்கு எஜமானனான யோகியை எதிர்க்கத் துணிந்துவிட்டாள். கிளர்ச்சிக்கும் சாந்திக்கும் இடையே புயல் எழுந்தது; ஜீவனுக்கும் முக்திக்கும் இடையே போட்டி மூண்டது. ஆயினும் குமாரகிரி சிறிதும் கலங்கவில்லை.

"உண்மை ஒன்றுதான். அதுதான் மெய்யறிவு. சாந்தியும் சுகமும் தரும் வழிதான் சரியான வழி" என்று சொன்னான்.

யோகியின் விழிகளும் நடன ராணியின் விழிகளும் ஒருகணம் ஒன்று கலந்தன. தவ விழிகளுக்கெதிரே காம விழிகள் கலக்கமுற்றன, நடுக்கமுற்றன. ஆயினும் அவள் சிரமப்பட்டுத் துணிச்சலை வரவழைத்துக்கொண்டு, "சாந்தி, சுகம். ஆகா! என்ன அழகான வார்த்தைகள்! ஒரு வேலையும் இல்லாமல் கையைக் கட்டிக்கொண்டு சும்மா உட்கார்ந்திருப்பதிலே கிட்டும் அமைதியைப் போல வேறு எதிலும் கிட்டுவதில்லை.

ஆகவே சாந்தி என்பது சோம்பேறித்தனத்தின் மாற்றுப் பெயர் என்று ஆகிறது. சுகம் என்று இன்னொரு வார்த்தை சொன்னீர்களே, அதை இன்னதுதான் என்று வரையறுத்துச் சொல்வதற்கு இதுவரை யாராலும் முடியவில்லை" என்றாள்.

சித்திரலேகாவின் வாயிலிருந்து வெளிவந்த தர்சன சாஸ்திரத்தின் தர்க்க ரீதியான விபரீத ஆராய்ச்சிகளைக் கேட்டு யோகி குமாரகிரி திகைத்தான். தன்னுடன் உரையாடிக் கொண்டிருக்கும் பெண் அழகி மட்டும் அல்ல; அறிவிலும் சிறந்தவள் என்பதை உணர்ந்தான். 'கற்றாரைக் கற்றாரே காமுறுவர்' என்பது பொய்யா மொழியல்லவா? சித்திரலேகாவின் சிந்தனா சக்தியையும் திறமையையும் கண்டு குமாரகிரி சிறிது நேரம் மௌனத்தில் ஆழ்ந்தான். பிறகு அவன் மெதுவான, திட்டமான குரலில், "சாந்தி என்பது 'சோம்பேறித்தனத்தின் மாற்றுப் பெயர்' என்று சொன்னாயே, அது ரொம்ப சரியான வார்த்தை. சோம்பேறித்தனம் என்னும் அந்த வேலையின்மையிலேதான் முக்தி நெறி அடங்கியிருக்கிறது. உலகம் எதைச் சோம்பேறித்தனம் என்று சொல்லுகிறதோ, அது உண்மையில் சோம்பேறித்தனமே யல்ல. ஏனெனில் கையைக் கட்டிக் கொண்டு சோம்பேறியாக உட்கார்ந்திருக்கும் நிலைமையில் தான் மூளை வேலை செய்கிறது. மூளை வேலை செய்யச் செய்ய நாம் எந்தச் சூன்யத்தில் உண்டானோமோ, அந்தச் சூன்யத்தில் லயித்து விடுகிறோம். அதுதான் வாழ்க்கையின் நிரந்தரமான லட்சியம் ஆகும். சுகத்தைப் பற்றி வரையறுத்துச் சொல்வதற்கில்லை என்று சொன்னாயே, அதுவும் நியாயமே. ஆனால் சுகம் என்பது ஒன்றே ஒன்றுதான். அதில் எந்தவிதமான பேதமும் கிடையாது. அந்தச் சுகம்—அந்தப் பேரின்பம்—எது என்பதை மனிதன் அறிந்து கொண்டு விடுவானாகில், அவன் சாதாரண நிலைமையிலிருந்து எவ்வளவோ மடங்கு உயர்ந்து விடக் கூடும்" என்றான்.

சித்திரலேகா அவனுடைய பேச்சிலே சாரம் இருப்பதைக் கண்டாள். காளைப் பருவத்தினனும் கானகவாசியுமான குமார யோகியிடம், தன்னையும் அறியாமல் ஏதோ ஒரு ஈடுபாடு தனக்கு உண்டாவதையும் அவள் உணர்ந்தாள். ஆயினும் மற்றும் ஒரு முறை துணிவை வரவழைத்துக் கொண்டு, "சூன்யமா! உங்களுடைய சூன்ய வாதத்தை யார் நம்புகிறார்கள்? கண்ணுக்கு எதிரே காணப்படுவதுதான் சத்தியமானது; நித்தியமானது. சூன்யம் என்பது கற்பனைப் பொருள். கடமைகளைச் சரிவரச் செய்ய வேண்டும் என்பதற்காகத்தான் கடவுள் மனிதனைப் படைத்திருக்கிறாரே யொழிய, பயங்கொள்ளிகளைப் போலப் பயந்து பதுங்கிக் கொள்வதற்காகப் படைக்கவில்லை. சுகம் என்றீர்களே, அது திருப்தியின் மாற்றுப் பெயர் ஆகும். ஆசை உள்ள இடத்தில்—ஆவல் நிறைந்த இடத்தில்தான் திருப்தி வாசம் செய்யும். என்ன, புரிகிறதா?" என்றாள் அவள்.

பீஜகுப்தன் தனது சிஷ்யையும் தன்னுடைய வாழ்க்கைத் துணைவியுமான சித்திரலேகா தர்க்க ரீதியான முறையில் தன் கொள்கைகளைச் சொல்லுவதைக் கேட்டு மனதுக்குள் மிகவும் மகிழ்ச்சியுற்றான். விசாலதேவன் நடன ராணியின் நுண்ணறிவைக் கண்டு பிரமித்துப் போனான். இருவரும் குமாரகிரியின் பதிலை எதிர்பார்த்த வண்ணம் உட்கார்ந்திருந்தனர்.

குமாரகிரி சிறிது நேரம் மௌனத்தில் ஆழ்ந்திருந்தான். பிறகு கம்பீரமான குரலில், "பார்க்கப் போனால் கடவுளுக்கும் மனிதனுக்கும் யாதொரு விதமான பேதமும் இல்லை. அவன் வேறாகவும் நாம் வேறாகவும் தோன்றுவதெல்லாம் வெறும் பிரமைதான். இந்த உலகத்தில் 'நான், நீ' என்ற பாகுபாடே கிடையாது. ஏனெனில் நீயும் பரம் பொருளின் அம்சம்; நானும் அதே பரம்பொருளின் அம்சம். ஒரே ஒரு சின்ன வித்தியாசம் என்ன வென்றால், உன்னை மாயை என்னும் மோகத் திரை மறைத்திருக்கிறது. நான் அதைக் கிழித்து எறிந்தவன். அதன் கட்டிலிருந்து விடுபட்டவன். சுகம் என்பது திருப்தி என்கிறாயே, அங்கேயும் நீ தவறுதான் இழைக்கிறாய். துயரம் நிரம்பிய உலகத்தைத் துறந்து விடுவதைத்தான் சுகம், இன்பம் என்று என் போன்றவர்கள் சொல்கிறார்கள்" என்று சொல்லிச் சிறிது நேரம் நிறுத்தினான் அவன். ஆனால் அடுத்த கணமே சித்திரலேகாவுக்குப் பேசச் சந்தர்ப்பம் அளிக்காமல் "தர்க்கத்துக்கு ஒரு முடிவு கிடையாது. சத்தியம் என்பது அனுபவத்தினால் உணரக்கூடிய பொருள். அனுபவம், நம்பிக்கை இவ்விரண்டுமின்றி மனிதன் மெய்யறிவைப் பெற முடியாது" என்று சொல்லிவிட்டு, "நேரமாகி விட்டது; இனி நித்திரைக்குச் செல்வதுதான் உசிதம்" என்று ஆசனத்தை விட்டு எழுந்தான். (தொடரும்)

பாப்பா மலர்

# கடல் கன்னி



## 2. இது என்ன அதிசயம்!

கடலழகி கூறிய கதையைக் கேட்டுப் பாரசீக மன்னன் திகைத்துப் போனான். இதெல்லாம் உண்மையாயிருக்க முடியுமா என்று ஆச்சரியப்பட்டான். கடல் ஜனங்களைப் பற்றித் தனக்குக் கூறும்படி கேட்டான். கடலுக்குள்ளேயே இருந்து கொண்டு எப்படி மூழ்காமலிருக்க முடியும் என்று அறிய ஆவல் கொண்டான்.

கடலழகி சொன்னாள் :

" கடலிலிருந்தாலும் பூமிக்கு வந்தாலும் மூச்சு விடும்படி எங்கள் தேகம் அமைந்திருக்கிறது. கடல் நீரினால் எங்கள் உடைகூட நனைவதில்லை. கடலுக்குள் பல தேசங்கள் இருக்கின்றன. பல அழகிய நகரங்கள் இருக்கின்றன. கடலில் வைரங்களும் வைடூரியங்களும் ஏராளமாக இருக்கின்றன. அந்தக் கற்களும் முத்துக்களும் பூமியிலுள்ளவற்றைவிட ரொம்பப் பெரியவை. அந்த விலை மதிப்பிட முடியாத கற்களுக்கு பூமியிலுள்ளவைகளைவிட அழகும் ஒளியும் அதிகம்."

கடல் மக்களைப் பற்றிய விவரங்களைக் கூறி முடித்த பிறகு கடலழகி தன் தாய், தமையன், மற்ற உறவினர் யாவரையும் வரவழைக்கும்படி மன்னனை வேண்டினாள். அவர்களை மீண்டும் சந்திக்கத் தான் ஆவலாயிருப்பதாகத் தெரிவித்தாள். பாரசீக மன்னன் மாதிரி வீரம் வாய்ந்த ஒரு அரசனைத் தான் மணந்து கொண்டது பற்றி அவர்கள் யாவரும் ஆனந்த மடைவார்கள் எனவும் கூறினாள்.

அவளுடைய அண்ணனையும் தாயையும், பிறரையும் அழைக்கத் தயாராயிருப்பதாக மன்னன் தெரிவித்தான். ஆனால் கடலடியிலிருப்பவர்களுக்கு எப்படி அழைப்பு அனுப்புவது என்றுதான் அவனுக்கு விளங்கவில்லை. அரசனது மனக் குழப்பத்தைப் புரிந்து கொண்ட கடலழகி, "நீங்கள் சற்று மறைவாக இருந்து ஜன்னல் வழியாகப் பார்த்தால், அவர்களை நான் எப்படி வரவழைக்கிறேன் என்று நீங்கள் காணலாம்" என்று பதில் கூறினாள்.

அவ்வாறே பாரசீக மன்னன் ஜன்னலுக்குப் பின்னிருந்து பார்த்தான். கடலழகி தன் தோழி ஒருத்தியை அழைத்து ஒரு சட்டியில் தணல் கொண்டு வரும்படி கூறினாள். அத்தணல் மீது ஏதோ ஒருவிதப் பொடியைத் தூவினாள். தணலிலிருந்து புகை கிளம்பியவுடன், பாரசீக மன்னனுக்குப் புரியாத ஒரு பாஷையில் சில மந்திரங்களை ஓதினாள். இவ்வார்த்தைகள் வெளிவந்தவுடன் கடல் கொந்தளித்தது. திடீரெனக் கடல் இரு பகுதிகளாகப் பிரிந்தது. அதன் மத்தியிலிருந்து ஒரு இளைஞன் தோன்றினான். அவனுக்குப் பின் ஒரு வயதான அரச குடும்பத்து ஸ்திரீயும் அவளுக்குப் பணிபுரியும் ஐந்து பெண் மணிகளும் தோன்றினர். அவர்கள் யாவரும் கடற்கரைக்கு வந்தவுடன் இலேசாகத் தாவி மன்னன் நின்று கொண்டிருந்த ஜன்னலருகில் வந்தனர். அவர்கள் அப்பொழுதுதான் கடல் நீரிலிருந்து வெளியே வந்திருந்தாலும் அவர்களுடைய உடைகள் கொஞ்சம் கூட நனையாமலிருப்பது கண்டு மன்னன் ஆச்சரியமடைந்தான். உதய சூரியன் மாதிரி ஜோதியுடன் அவர்கள் யாவரும் விளங்கியது மன்னனின் ஆச்சரியத்தை அதிகரிக்கச் செய்தது.

ரா.ஙா

கடலழகி தன் தாயையும், தமையனையும் பன்முறை முத்தமிட்டாள். இவ்வாறு சிறிது நேரம் பேசிய பிறகு தனது தாயைவிட்டுப் பிரிந்த

பிறகு தனக்கு நேர்ந்தவைகளை ஒன்று விடாமல் கூறினான். **கடலழகி** உலகிலே சக்திவாய்ந்த மன்னனின் ராணியாயிருப்பது கண்டு அவளுடைய சுற்றத்தார் ஆனந்த மடைந்தனர். உலக மன்னன் ஒருவனுடன் வசிக்க இஷ்டந்தானா என்று **கடலழகியை** அவள் தாய் கேட்டாள். பாரசீக மன்னன் மீது தான் மிகுந்த ஆசை கொண்டிருப்பதாகவும், அவனை விட்டு என்றும் பிரியப் போவதில்லை என்றும் **கடலழகி** பதிலளித்தாள்.

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த மன்னனின் சந்தோஷத்திற்கு அளவேயில்லை. **கடலழகி** தன் கணவனை அழைத்துத் தனது தாய்க்கும் தம்பியுக்கும் அறிமுகம் செய்துவைத்தாள். மன்னனும் புதிய விருந்தினரை மிகவும் மரியாதையுடன் வரவேற்றான். தன்னுடைய அரண்மனையில் சில காலம் தங்கிச் செல்லும்படி அவர்களைக் கேட்டுக் கொண்டான். அவர்களும் சம்மதித்தனர். தினம் தனது விருந்தினரை மகிழ்விக்க, மன்னன் உயர் தரமான விருந்துகளுக்கும், அற்புத நடனங்களுக்கும் இனிய சங்கீதக் கச்சேரிகளுக்கும் ஏற்பாடு செய்தான்.

அவர்கள் பாரசீக மன்னனுடன் தங்கியிருக்கையில் **கடலழகிக்கு** ஒரு அழகிய ஆண் குழந்தை பிறந்தது. இதனால் மன்னனுக்கும் விருந்தினர்களுக்கும் அளவிலா மகிழ்ச்சி ஏற்பட்டது. இளவரசன் பிறந்தது குறித்து மன்னன் உத்தரவுப்படி நாடெங்கும் கொண்டாட்டங்கள் நடந்தன. இளவரசனுக்கு **முழுமதி** அல்லது **பூரணசந்திரன்** என்று மன்னன் பெயரிட்டான்.

ஒரு நாள் மன்னன் தனது விருந்தினர்களுடன் பேசிக் கொண்டிருக்கையில் ஒரு தோழி புதிதாகப் பிறந்த இளவரசனை எடுத்துக் கொண்டு அங்கு வந்தாள். குழந்தையைப் பார்த்தவுடன், அதன் மாமன் **சலிப்** மன்னன் அதைத் தாதியிடமிருந்து வாங்கிக் கொஞ்சிக் கொண்டிருந்தான். இவ்வாறு குலாவிக்கொண்டே கொஞ்ச நேரத்துக் கெல்லாம் யாரிடமும் சொல்லாமல் ஜன்னல் வழியாகக் குழந்தையுடன் கடலில் குதித்தான்.

இதைக் கண்டு பாரசீக மன்னன் பயமடைந்து கூக்குர லிட்டான். தன் அருமை மைந்தன் கடலில் மூழ்கிவிடுவானே என்று நடுங்கிப் போய் விட்டான். **கடலழகி** மன்னனுக்கு ஆறுதல் கூறினாள். தன் மகன் தன்னைப் போலவே கடலிலும் பூமியிலும் பத்திரமாக வாழ்வான் என்று அவள் தன் கணவனிடம் கூறினாள். **கடலழகி** கூறியது உண்மை என்பதை நிரூபிப்பது போல சலிப் மன்னன் தன் மருமகனுடன் கடலிலிருந்து மறுபடியும் பாரசீக மன்னனிடம் வந்தான். இளவரசன் **முழுமதி** சற்றேனும் நனையவில்லை. மிகவும் உற்சாகமாகவே இருந்தான். கடலுக்குள் குதித்து



விட்டுத் திரும்புகையில் சலிப் மன்னன் ஒரு பெட்டி நிறைய நகைகள் கொண்டு வந்து தனது தங்கையின் கணவனான பாரசீக மன்னனுக்குப் பரிசாக அளித்தான். புறாவின் முட்டையளவு பெரிதான முந்நூறு வைரக் கற்களும், முந்நூறு பஞ்சரத்னக் கற்களும், வைரத்தாலான, ஆறு அங்குல நீளமுள்ள முந்நூறு மந்திரக் கழிகளும், பத்து அடி நீளமுள்ள பெரிய முத்துக்கள் கோர்த்த முப்பது மாலைகளும் சலிப் கொண்டுவந்த பெட்டியில் இருந்தன. இவ்வளவு அதிசயமான, விலையுயர்ந்த ஆபரணங்களைக் கண்டு பாரசீக மன்னன் வியப்படைந்தான்.



ஆனால் கடலுக்குள் உள்ள வைர வைடூரியங்களுக்கு இவை ஈடாக மாட்டா என்று கடலழகி தன் கணவனுக்குக் கூறினாள்.

இந்த சம்பவம் நடந்த பிறகு கடல் ராணி பரோஷாவும் அவள் மகன் சலீபும் தங்கள் பரிவாரங்களுடன் மறுபடியும் கடலுக்குள் சென்றனர். விடைபெற்றுச் செல்லுகையில் பாரசீக மன்னனையும், அவன் மனைவியையும், அவர்களது ஆசைக் குமாரனையும் அடிக்கடி வந்து பார்ப்பதாக வாக்களித்தனர். அவர்கள் சென்ற பிறகு பாரசீக ராஜ்யம் வழக்கம்போல் அமைதியாக நடந்துவந்தது.

இளவரசன் முழுமதி மிகவும் பரிவுடன் வளர்க்கப்பட்டுவந்தான். இளவரசன் அழகிலும் குணத்திலும், புத்திக் கூர்மையிலும், தீரத்திலும் அவனுக்கு சமம் யாரும் இல்லை என்று கூறும் வகையில் வளர்ந்து வந்தான். கல்வி கேள்விகளிலும் யுத்தப் பயிற்சியிலும் அவன் சிறந்து விளங்கினான். நாட்டு மக்கள் அவனை தெய்வம்போல் கொண்டாடினர்.

இளவரசனுக்குப் பதினைந்து வயதானவுடன் பாரசீக மன்னன் அவனுக்கு முடிசூட்ட விரும்பினான். தனக்கும் வயதாகி விட்டதால் தானிருக்கும் பொழுதே தன் மகனுக்கு ராஜ்ய பாரத்தைக் கற்பிக்கவும் அவன் எப்படி அரசாள்கிறான் என்பதைக் கண்ணால் காணவும் ஆசை கொண்டான். இந்த ஏற்பாட்டை மன்னனின் மந்திரிகளும் ஆதரித்தனர். மக்களும் இந்த முடிவை வரவேற்றனர். மிகுந்த குதூகலத்திடையே மன்னன் தனது மகன் முழுமதிக்கு முடிசூட்டி வைத்தான்.

## ராவிக் கொடுங்கள்!



புதிய அரசன் சிறுவனாயிருந்த போதிலும் புத்திசாலித்தனமாக நாட்டை ஆண்டு வந்தான். தன் மகனுடைய ஆட்சியைக் கண்டு தந்தையே மனமகிழ்ந்தான். அவனைப் போன்ற அரசன் தங்களுக்குக் கிடைத்தது தங்கள் பாக்கியம் என்று மக்கள் புகழ்ந்து கொண்டாடினார்கள். அவனுடைய ஆட்சியின் இரண்டாவது வருஷத்தில் தன ராஜ்யத்திலுள்ள எல்லா முக்கிய நகரங்களுக்கும் விஜயம் செய்தான். அங்கங்கே மக்கள் எப்படி வாழ்கிறார்கள், அவர்கள் நிலைமை எப்படியிருக்கிறது என்பதைப் பார்த்தான். தனது பிரயாணத்தின்போது தனது குடிமக்கள் யாவரும் திருப்தியாகவும் சந்தோஷமாகவும் வாழ்வதைக் கண்டான்.

ராஜ்யத்தைச் சுற்றிவிட்டு, தலைநகருக்கு முழுமதி திரும்பியதும் அவனது தந்தை நோய்வாய்ப்பட்டார். சில காலத்திற்கெல்லாம் இறந்து போனார். பாரசீக மன்னனின் மரணத்தினால் அவன் மனைவியும் மகனும் நீண்ட நாள் துக்கத்திலாழ்ந்திருந்தனர். ஆனால் தன் ஜனங்களுக்குச் செய்யவேண்டிய கடமையை நினைத்து மன்னன் முழுமதி தனது துக்கத்தை மறந்து மீண்டும் ராஜ்ய காரியங்களைக் கவனிக்க ஆரம்பித்தான். (தொடரும்)

## எத்தனை பேர்?

●

தனவந்தர் ஒருவர் 48,000 ரூபாய் சேர்த்து வைத்திருந்தார். அந்திய காலத்தில் அவர் தம்முடைய பிள்ளைகளுக்கு அந்தப் பணத்தைச் சமமாகப் பிரித்துக் கொடுக்க நினைத்தார். மூத்த பிள்ளைகள் சிலருக்கு இது பிடிக்கவில்லை. அவர்கள் தங்களுடைய பங்கைப் பெற்றுக்கொள்ளாமல் வீட்டை விட்டு வெளியேறி விட்டனர். இதனால் வீட்டிலிருந்த இளைய பிள்ளைகளுக்கு 11,200 ரூபாய் அதிகமாகக் கிடைத்தது. அப்படியானால் தகப்பனாரிடம் கோபித்துக்கொண்டு வீட்டை விட்டு வெளியேறியவர்கள் எத்தனை பேர்?

விடை அடுத்த இதழில்

**சென்ற வாரத்தில் வெளியாகியிருக்கும் சதுரக் கணக்குக்கு விடை: 39**

## "போய் வருகிறேன், மன்றோ!"

சென்னையில் ஐலண்ட் கிரவுண்டு மைதானத்துக்குப் பக்கத்தில் ஒரு பெரிய சிலை இருக்கிறது. அது மன்றோ சிலை. மிகவும் அழகான ஒரு குதிரைமீது ஸர் தாமஸ் மன்றோ உட்கார்ந்திருப்பதை அந்தச் சிலை சித்திரிக்கிறது.

பல வருஷங்களுக்கு முன் சென்னையில் ஒரு பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர் இருந்தார். அவருக்கு ஒரு மகன் இருந்தான். வயது ஐந்து இருக்கும். நாள்தோறும் மாலையில் தந்தை தம் மகனை அழைத்துக் கொண்டு அந்தச் சிலை இருக்கும் பக்கமாக உலாவப் போவது வழக்கம். ஒரு நாள் அவன் தந்தையைப் பார்த்து, "அப்பா! இது யார் சிலை?" என்று கேட்டான். "இது மன்றோ சிலை!" என்று தந்தை கூறினார்.



பல மாதங்கள் கழிந்தன. உத்தியோகஸ்தருடைய பதவிக்காலம் முடிந்தது. அவர் இங்கிலாந்துக்குப் புறப்பட்டார். புறப்படுவதற்கு முதல் நாள் அந்தச் சிலையைக் கடைசியாக ஒரு தடவை பார்க்க வேண்டுமென்று சிறுவன் ஆசைப்பட்டான். தந்தை அதற்கு இணங்கி அவனை அங்கே அழைத்துக்கொண்டு போனார். பையன் வெகு நேரம் வரை அந்தச் சிலையைப் பார்த்துக்கொண்டே இருந்தான். பிறகு கண்களில் நீர் ததும்ப, "போய் வருகிறேன் மன்றோ!" என்றான்.

இதைப் பார்த்துத் தந்தையின் மனம் கூட உருகிவிட்டது.

இரண்டு பேரும் இங்கிலாந்துக்குப் புறப்பட்டார்கள். சிறுவன் தந்தையை நோக்கி, "அப்பா, மன்றோவின்மேலே உட்கார்ந்திருந்தானே, அந்த மனிதன் யார்?" என்று கேட்டான்.

அதுவரை சிறுவனுடைய உள்ளத்தைக் கவர்ந்திருந்தது குதிரையின் சிலை என்னும் விஷயம் தந்தைக்கு அப்போதுதான் தெரிந்தது!




## 1 மல்லிகா

குழப்பமற்ற தேசத்தில் தனியரசாட்சி செய்யும் மன்னனைப்போல் நிர்மலமான வான வெளியில் சந்திரன் ஒளியாட்சி செய்து வந்தான். மூலைக்கொன்றாக ஒளி வீசும் விண் மீன்கள் அரசனையும் நாட்டையும் பாதுகாக்கும் காவலர்கள் போல் மின்னின. மாடியில் நான் திறந்த வெளியில் படுத்திருந்தேன். குளிர் காலமாயினும் எனக்கு அந்தத் திறந்த வெளியும் குளிர் காற்றும் வேண்டித்தானிருந்தன. குழம்பி நிற்கும் பனியும் 'ஜிலுஜிலு' வென்று வீசும் பனிக்காற்றும் என் இருதய தாபத்தைச் சிறிதாவது தணிக்குமென்று நான் நினைத்தது அசட்டுத்தனமாக இருக்கலாம். ஆனால் அது எனக்கு வேண்டித்தானிருந்தது அப்பொழுது.

மல்லிகாவின் குரல் கேட்டது. இரண்டொரு பேச்சுக்களிடையே ஓடிப் பாட்டைத் துண்டுத் துண்டாகப் பாடுவது அவளுக்கு வழக்கமாய்ப் போய் விட்டது. அவளால் பாடாமலேயே இருக்க முடியாது போலிருக்கிறது.

"வாச மலரைக் கண்ட
வண்டு தேனுண்ணுதோ!
நேசம் கொண்ட நெஞ்சம்
நெருங்கி ஒட்டாதோ?
ஆசைக் கடலிலே
ஓயுமோ......!"

கணீரென்ற இந்தக் குரல் என் காதுகளில் வந்து ரீங்காரமிட்டது என்று சொல்லுவதைவிட, சுடு சரமாக இருதயத்தில் வந்து பாய்ந்தது என்று சொல்லி விடலாம். ஏதாவது பாடவேண்டும் என்பதற்காகப் பாடுகிறாளா, அல்லது பாடலின் கருத்தை உணர்ந்து உருகிப் பாடுகிறாளா? உணர்ச்சியும் உருக்கமும் அவளுக்கு இருந்தால் நான் இங்கு வந்து இருபது நாட்களுக்கு மேலாகி விட்டதே, அவன் எதற்காக வந்திருக்கிறேன் என்பதை இதற்குள் தெரிந்து கொண்டிருக்க மாட்டாளா?

மணி பத்துக்கு மேலிருக்கும். மல்லிகா தூங்கப் போயிருப்பாள். இல்லாவிட்டால்

சிறிது நேரம் ஏதாவது கதைப் புத்தகங்களைப் படித்துக் கொண்டிருப்பாள்.

'பகல் முழுவதும் ஏதோ தொழிற்சாலையில் வேலை செய்தவன் போல் என் உடல் முழுவதும் வலியாக இருந்தது. புரண்டு புரண்டு படுத்தேன். கொதிக்கும் நீரிலிருந்து கிளம்பும் நீராவியைப்போல் என் உள்ளத்திலிருந்து ஒரு பெருமூச்சு கிளம்பியது. நான் குடந்தைக்கு வந்து ஒரு மாதமாகப் போகிறது. எதற்காக வந்தேன்? இது மல்லிகாவுக்குத் தெரியுமா? ஒருவேளை அத்தைக்குத் தெரிந்திருக்கலாம்; பணச் செருக்கில் மமதை கொண்ட அவள், காதலை அறிந்து களித்து எனக்கும் மல்லிகாவுக்கும் கல்யாணம் செய்து வைத்து விடத் தீர்மானிப்பாளா? நான் முழு முட்டாளாயிருந்தால்கூட இப்படி ஒரு கனவு காணமுடியாது. ஆனால் மல்லிகாவின் இளமையுள்ளம் அத்தையின் உள்ளத்தைப் போல இருக்குமென்று நான் நினைக்கவில்லையே! அவளுக்கு என் மீது அன்பு இருக்கிறது என்பதற்கு ஒரு சமிக்ஞைகூட இல்லையே! வழக்கமாக இவர்கள் வீட்டிற்கு வரும் விருந்தினர்களில் நானும் ஒருவனைப் போலல்லவா இருக்கிறேன்? 'அத்தான்' என்று அடிக்கடி கூப்பிடும் குரலில்கூட ஒரு குழைவும் இல்லையே! எப்பொழுதாவது சிரிக்கும் அந்தச் சிரிப்பில்கூட ஒரு தனி உணர்ச்சியைக் கண்டுபிடிக்க முடியவில்லையே! ரேஷன் காலத்தில் ஒரு மாத காலமாக வீட்டோடு தங்கியிருக்கும் எனக்கு அவர்கள் மனங் கோணாமல் சாப்பாடு போடுகிறார்கள். இது அதிசயம்தான்! ஆனால் நான் சாப்பாட்டிற்கு வழியில்லாமல்தான் இங்கு வந்தேனா?



திசை தெரியாது சுற்றும் பிரயாணி கால் ஓய்ந்து உட்காருவது போல்' என் சிந்தனையில் ஒரு தேக்கம்; உள்ளத்தில் ஒரு ஓய்ச்சல்; தூக்கமும் கண்களை வந்து தழுவியது. எழுந்து உட்கார்ந்து கைகளை முறுக்கி உதறி விட்டு ஒரு கொட்டாவி விட்டேன். 'இனிமேல் வீணான ஆசைகளையெல்லாம் வைத்துக் கொண்டு இங்கே இருப்பது பிசகு; அசட்டுத் தனம். நாளைய தினமே மதுரைக்குப் போய் விடுவதுதான் யோக்கியதை' என்று தீர்மானித்துக் கொண்டு படுக்கையில் படுத்தேன். சுற்றிலும் பனி மூட்டம் அதிகமாயிருந்தது. உலகத்தில் எத்தனையோ உன்னதமான கைப் பொருளைச் சிதற விட்டாலும் பனி வாடையில் என்

உடலை விறைக்க வைப்பது பாவமாகத்தான் தோன்றியது எனக்கு. போர்வையை எடுத்துப் போர்த்திக் கொண்டேன். தூக்கம் கண்களை அழுத்தியது.

'கலகல' வென்ற வளையலின் ஒலி கேட்டது. அதற்குள் தூக்கத்திற்குப் பூரண அடிமையாகி விடவில்லை நான். சட்டென்று எழுந்து உட்கார்ந்தேன்.

'மல்லிகா—அவளேதான்! மல்லிகாவைப் பார்த்திராதவர்கள் அந்த நிசி வேளையில் அவளைப் பார்க்கும்படி நேர்ந்திருந்தால் 'மோகினிப் பிசாசு' என்று நிச்சயம் அலறி யிருப்பார்கள்!

“நல்ல தூக்கமோ, அத்தான்?” என்றாள்.

“இல்லை, இப்போது தான் தூங்கலாமென்று நினைத்தேன்...”

“ஐயோ பாவம்! நான் உங்கள் தூக்கத்தைக் கெடுத்து விட்டேன். சரி, இந்தப் பாலைக் குடியுங்க!” என்று சொல்லிப் பால் குவளையை என் படுக்கைக்குப் பக்கத்தில் வைத்தாள். அப்பொழுதுதான் ஞாபகத்திற்கு வந்தது—நான் கீழே இருந்து வரும்போது மேஜை மீது வைத்திருந்த பாலைக் குடிக்காமல் வந்து விட்டது. பால் குவளையைக் கையில் எடுத்துக் கொண்டே, “மல்லி! நான் நாளைய தினம் ஊருக்குப் போய் விடலாமென்று இருக்கிறேன்” என்றேன்.

“நாளைக்கா! என் அத்தான்? இன்னும் இரண்டு மூன்று நாள் இருந்து விட்டுப் போகலாமே!” என்றாள்.

இந்த வார்த்தையில் திகைப்பு, அதிசயம், ஆச்சரியம் ஒன்றுமில்லை. சாதாரண வாய் உபசாரமாகத்தா னிருந்தது. நிலவின் ஒளியில் என் எதிரில் நிற்கும் அவள் முகம் நன்றாகத்தான் தெரிந்தது. எப்பொழுதும் போல் எதிரியை வசீகரிக்கும் அழகு அந்த முகத்தில் இருந்தது. ஆனால் அதில் எவ்வித உணர்ச்சிக் குறிப்பும் இல்லை.




இன்னும் இரண்டு மூன்று நாள் தங்கிச் செல்வதில் விசேஷமாக ஏதேனும் நிகழுமா? நான் அங்கு இருப்பதில் அவளுக்கு ஏதேனும் தனியான ஆனந்தமும் இன்பமும் உண்டா? என்னைப் பிரிவதில் அவளுக்கு சோகம் ஏற்படுமா?—என் கடைசி ஆசையாக எல்லாவற்றையும் அவள் முகத்திலிருந்தே தெரிந்து கொள்ள நான் விரும்பினேன். அவளுடைய உபசாரம் பெருந்தன்மைக்குக் குறைவு படாததாயிருந்ததே

தவிர விருப்பத்தின் தூண்டுதலாக இல்லை. ஆகவே, "இன்னும் இரண்டு மூன்று நாளிருந்தாலும், இரண்டு மூன்று வருடமிருந்தாலும் ஒன்றுதான், மல்லிகா!" என்றேன் நான் தாழ்வான குரலில்.

"அப்புறம் உங்கள் இஷ்டம். அப்படியே மறந்து போயிடாதீங்க, அத்தை வீட்டை; வருஷம் ஒரு தடையாவது வந்து போயிட்டு இருங்க!" என்று சொல்லிக் கொண்டே அவள் பால் குவளையைக் கையில் எடுத்துக் கொண்டாள்.

"மறந்து போயிடுவேனா, மல்லி! அடிக்கடி வருகிறேன்!" என்றேன் பரஸ்பரம் செய்ய வேண்டிய உபசார தோரணையில்.

"சரி, தூங்குங்க!" என்று சொல்லி விட்டு அவள் நடந்தாள்.

போகிறவளைத் தடுத்து நிறுத்தி என் இருதயத்தில் உள்ளவைகளை வார்த்தைகளாகக் கொட்டிக் கேட்டு விடலாம். ஆனால் பழக்கத்திலும் பார்வையிலும் கண்ட தோல்வியைப்போல் வார்த்தைகள் மூலமாக ஒரு தோல்வியைக் காண எனக்குச் சம்மதமில்லை. படுத்துக் கொண்டேன். சிந்தனை மோதித் தெறித்தது. இவைகளையெல்லாம் லட்சியம் செய்யாது தூக்கம் என்னை ஒருபுறம் ஆட்கொண்டது.

வருடங்கள் மூன்றுக்கு மேல் ஓடி விட்டன. மல்லிகாவின் நினைவு நெஞ்சில் நிழலாகப் படிந்திருக்கிறது. இந்த நிழல் என் ஆயுள் காலம் பூராவும் இருந்தாலும் இருக்கலாம் அல்லவா?

## 2. நீலா

வருடத்தில் ஒரு மாதம் விடுமுறை. நெடுநாட்களாக என் சகோதரி கடிதம் எழுதிக் கொண்டிருந்தாள்—ஒரு தடவையாவது வந்து பார்த்து விட்டுப் போகும்படி. இந்த வருடம் ஒரு மாத விடுமுறையைச் சகோதரியின் வீட்டில் கழிப்பதென்று தீர்மானித்துக் கொண்டு மதுரைக்குச் சென்றேன். மதுரை சென்றவுடன்தான் எதற்காக என் சகோதரி ஒரு தடவையாவது அங்கு வந்து பார்த்துவிட்டுப் போகும்படி அடிக்கடி கடிதம் எழுதினாள் என்பது விளங்கியது. என் சகோதரியின் மகள் நீலா முன்பு நான் பார்த்ததற்கு இப்பொழுது எவ்வளவோ மாறுதலடைந்திருந்தாள். பதினாறு வயதையடைந்திருந்த ஒரு பெண் மாறுதலடையாமல் எப்படி இருப்பாள்? என் சகோதரியின் மனதிலிருந்த அபிப்பிராயத்தை மிக எளிதில் உணர்ந்தேன். இந்த அபிப்பிராயத்தை நான் அறிந்து கொண்டவுடன் வியப்படையவில்லை. கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அழுவார்களா? என்னை விடத் தகுந்த கணவன் நீலாவிற்கு உலகத்தில் கிடைப்பானென்ற நம்பிக்கை அக்காவுக்குத் துளிக்கூட இல்லை போலிருக்கிறது. அக்காவின் பேதமை நிறைந்த மனதில் இன்னுமொரு அசட்டு எண்ணமும் எழுந்திருக்கவேண்டும். மலரை வண்டு சுற்றிச் சுற்றி வருவது போல அழகை அள்ளிச் சொரியும் நீலாவைக் கண்டதும் உள்ளத்தைப் பறிகொடுத்து விடுவேன் என்று அவள் எண்ணியிருக்கிறாள். என் மீதுள்ள சகோதர வாஞ்சையாலும் நீலாவின் வாழ்க்கை இன்பத்திலுள்ள சிரத்தையாலும் இப்படியெல்லாம் அவள் நினைத்ததில் தவறு ஒன்றுமில்லை. ஆனால் நான்? என் மனது? பாவம், அவளுக்கு எப்படித் தெரியும்? இதை நான் அவளிடம் எப்படிச் சொல்ல முடியும்? அத்தையின் பெண்ணான மல்லிகாவைப் பார்த்தோ மூன்று வருடங்களாகி விட்டன. அவள் எட்டாக் கனியாகி விட்டாள். ஆனால் என் உள்ளத்தைத் தன் வசமாக்கிக் கொள்ளும் வேறொரு பொழிலை இது வரை நான் பார்க்கவில்லையே! நீலாவும் அழகிதான். ஆனால் அந்தக் கண்களில்—கன்னங்களில்—சிரிப்பில்—பேச்சில்—எல்லாவற்றிலும் உலகமறியாத சிறு குழந்தையின் உணர்ச்சியைத்தானே என்னால் பார்க்க முடிகிறது!

மதுரையிலுள்ள என் நண்பர்கள் சிலரைச் சந்தித்துவிட்டு அன்று வீடு திரும்பும்போது இரவு மணி எட்டாகி விட்டது. சாப்பிட்டு விட்டு வாசற்பக்கத்து அறையில் உட்கார்ந்தேன். மேஜை மீது ஏதோ ஒரு புத்தகம் கிடந்தது. அதை எடுத்துப் புரட்டினேன். ஏதோ காதல் கதை. ஒருபக்கம் புரட்டினேன். படிப்பதற்கு வெறுப்பாக இருந்தது. அதை மேஜை மீது வீசி எறிந்தேன். அங்கிருந்த கண்ணாடிச் சிம்னிக்குள் ஒரு விட்டில் பூச்சி விழுந்து இறக்கையை அடித்துக் கொண்டு துடித்தது. விளக்கின் சுடர் அமைதியாகத்தான் எரிந்து கொண்டிருந்தது. தன் காதலைப் பெற முடியாமல் செத்துக் கருகி விழுந்தாலும்கூட அந்தச் சுடர் ஒளி அமைதி குலையாது போலிருக்கிறது. என் சிந்தனை எங்கோ சென்றது. பெருமூச்சு விட்டேன்.

எனக்குப் பின்னால் யாரோ வந்து நிற்பது எதிர்ச் சுவரில் விழுந்த நிழலிலிருந்து நன்கு

தெரிந்தது. சட்டென்று திரும்பினேன். எனக்குப் பின்னால் நீலா நின்று கொண்டிருந்தாள். அவள் குறும்பாகச் சிரித்துக் கொண்டே, "என் மாமா, பூச்சியை விளக்குக்குள்ளே எடுத்துப் போட்டுவிட்டு வேடிக்கை பார்க்கிறீங்க ?" என்றாள்.

"நான் அந்தப் பூச்சியைப் போடவில்லை. விளக்கும் அந்தப் பூச்சியை 'வா' வென்று கூப்பிடவில்லை. அந்த அசட்டுப் பூச்சி தானாகவே உள்ளே போய் விழுந்து உயிரை விட்டிருக்கிறது !" என்றேன் பரிகாசமாகச் சிரித்துக் கொண்டே.

"பூச்சிகளுக்கு எப்படித் தெரியும் மாமா, நெருப்புச் சுடுமென்று ?"

"பூச்சிகளுக்கு மாத்திரமில்லை, நீலா ! சில மனிதர்களுக்கே தெரியாது நெருப்புச் சுடும் என்று !" என்றேன் நான்.

இதைக் கேட்டதும் நீலா 'கடகட' வென்று சிரித்தாள் குழந்தையைப்போல. "அதிருக்கட்டும், இதைப் பார்த்தீங்களா ?" என்று சொல்லித் தன் கையில் வைத்திருந்த ஒரு கடித உறையை என்னிடம் கொடுத்தாள்.

"என்ன இது ?" என்று சொல்லி உறையைப் பார்த்தேன். உயர்ந்தரகக் காகிதத்தில் அழகாக அச்சடிக்கப்பட்டிருந்த 'திருமண அழைப்பு இதழ்' அது. மேல் புறத்தில் 'மணமகன் சபாபதி; மணமகள் மல்லிகா' என்று பொறிக்கப்பட்டிருந்தது. அதைப் பிரித்துப் பார்த்து மேலே என்னவென்று தெரிந்து கொள்ளும் ஆர்வம் எனக்கு இல்லை. அந்தப் பத்திரிகையை மேஜைமீது போட்டுவிட்டு, "ஹூம், கல்யாண விருந்து வந்திருக்கிறது !" என்றேன் நீலாவைப் பார்த்து. ஆனால் என் இருதயத்தை ஏதோ அழுத்தி நெருக்குவது போலத்தான் அப்பொழுது எனக்கு இருந்தது.

"உங்களுக்குக்கூடப் பட்டணத்துக்குப் பத்திரிகை போயிருக்கும் இல்லையா, மாமா?" என்றாள் நீலா குழந்தைக் குரலிலே.

"தாராளமாகப் போயிருக்கும்" என்றேன் அலுப்படைந்த குரலில் நான்.

"அப்படின்னா, நீங்களும் கல்யாணத்துக்கு வருவீங்க இல்லையா, மாமா ?"

"நானா !—அதிருக்கட்டும், நீங்க போகப் போறீங்க, இல்லையா ?"

"அம்மா போகணும்னுதான் சொல்லிச்சு. நெருங்கின உறவாச்சே, போகாமல் முடியுமா, மாமா ?" என்றாள் நீலா.

"நெருங்கின உறவுதான் ! எவ்வளவு நெருங்கின உறவாயிருந்தாலும் மதிப்பெல்லாம் பணத்திலேதானிருக்கு !"

"என்ன மாமா, அப்படிச் சொல்றீங்க ?"

"சொந்த அத்தைதானே ? தன் மகளைத் தம்பி மகனுக்கே கொடுப்போம்னு தோணிச்சா ?"

என் உள்ளக் கொதிப்பும் ஆர்வமும் நீலாவுக்குத் தெரிந்து விடுவதில் ஒரு பிசகும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை.

இதைக் கேட்டதும் நீலாவின் முகம் அனல் பட்ட மலரிதழ் போல் வாடிக் கருகியது.

"அப்படி யென்றால் உங்களுக்கு மல்லிகாவைக் கல்யாணம் செய்து கொள்ளணும்னு ஆசை இருந்தது, இல்லையா ?"

அவள் வார்த்தைகளில் ஆத்திரமும் வேதனையும் கலந்திருந்தது. அதற்குமேல் அவள் ஒன்றும் பேசவில்லை.

குழந்தையின் இளம் உள்ளத்தைப் போன்றதுதான் நீலாவின் உள்ளமும். எனக்கு வயது முப்பது; அவளுக்கு வயது பதினாறு. அவள் பிறந்தது, வளர்ந்தது எல்லாம் இன்னும் என் நினைவிலிருந்து அகன்று விடவில்லை. அவளுக்கு வயது பதினாறு ஆனாலும் என் கண்களுக்குக் குழந்தையைப் போலத்தான் தோன்றுகிறாள். அவள் அழகு, அங்க அமைப்பு, அலங்காரம், பார்வை, சிரிப்பு, பேச்சு— இவைகளெல்லாம் வேறு எந்த வாலிபனை

## நல்ல காரணம்!



நீதிபதி ஜூரிகளைப் பார்த்து :— கைதியை விடுதலை செய்வதற்கு உங்கள் காரணம் என்ன ?

ஜூரிகளில் ஒருவர் :—பைத்தியந் தான் காரணம்....

நீதி :—அடாடா ! உங்கள் பதின் மூன்று பேருக்குமா பைத்தியம் ?

வேண்டுமானாலும் மயக்கலாம். ஆனால் எனக்கு......?

அக்காவுக்கும் நீலாவுக்கும் இந்த ஏமாற்றம் இடி விழுந்தாற்போலத்தா னிருக்கும். ஆனால் என் மனதை என்னால் ஏமாற்றிக் கொள்ள முடியுமா?

* * *

அக்காவும் நீலாவும் மல்லிகாவின் கல்யாணத்திற்குப் போய் வந்தார்கள். நான் மதுரையிலேயே இருந்தேன். கல்யாண விமரிசையைப்பற்றி அவர்களைக் கேட்க வேண்டுமென்ற ஆவல் மனதில் துடித்தாலும் நான் கேட்கவில்லை.

நடுப்பகல் மணி மூன்று இருக்கும். நான் ஏதோ ஒரு பழைய பத்திரிகையைப் புரட்டிய வண்ணம் நாற்காலியில் அமர்ந்திருந்தேன். நீலா என் எதிரில் வந்து நின்றாள். அவள் எதையோ என்னிடம் ஆவலோடு சொல்ல வந்திருக்கிறாள் என்பது அவள் முகத்திலிருந்து விளங்கியது. நான் பத்திரிகையை மூடி வைத்துவிட்டு, "கல்யாண விருந்து அமர்க்களம்தான் போலிருக்கிறது!" என்றேன்.

"விருந்துக்கென்ன குறைவு! கல்யாணத்திலே விருந்துதானா பெரிசு?" என்றாள் அவள், வேறு ஏதோ ஒரு பெரிய குறையைக் கண்டு பிடித்தவள்போல.

"அத்தை உங்களை யெல்லாம் மரியாதையாகத்தானே நடத்தினாள்?"

"அதிலெல்லாம் குறைவில்லை, மாமா! மல்லிகாவுக்கு இப்படி ஒரு புருஷன் வந்து வாய்த்திருக்க வேண்டாம்......"

"அவன் புருஷன் ரொம்பப் பொல்லாதவனா? வயதானவனா? இல்லாவிட்டால்......"

"பொல்லாதவனாய் இருந்தாலும் பாதகமில்லை, வயதானவனாய் இருந்தாலும் பாதகமில்லை. பார்ப்பதற்குக் கொஞ்சம் அழகு வேண்டாமா?"

"அழகா! ஆண் பிள்ளைகளிடமெல்லாம் அழகை எதிர்பார்க்கலாமா?"

"ஏன் எதிர்பார்க்கக் கூடாது? ஆண் பிள்ளைகளில் அழகானவர்களே உலகத்தில் கிடையாதா?"

இதைச் சொல்லும்போது ஏனோ வெட்கமும் ஆச்சரியமும் அவள் முகத்தில் பிரதிபலித்தது.

"மல்லிகாவின் புருஷன் என் மாதிரியாகக்கூட இருக்கமாட்டானா?" என்றேன்.

அவள் களுக்கென்று சிரித்தாள். "மாமா! மல்லிகாவுக்கு நீங்க கிடைச்சிருந்தா அவள் கோடித் தவம் செய்திருக்கான்னுதான் சொல்லணும்" என்றாள்.

"அந்தப் பாக்கியத்தைப் பெறக் கோடித் தவம் செய்த புண்ணியவதி எங்கே இருக்கிறாளோ?" என்றேன் கேலியாக.

நீலாவின் கன்னங்கள் குப்பென்று சிவந்தன. அந்தப் பேதைப் பெண்ணின் உள்ளம் எதை எண்ணிப் பெருமிதமடைகிறது என்பதைக் கண நேரத்தில் நான் உணர்ந்து கொண்டேன். அவள் வெட்கத்தால் குன்றிப் போய் நின்றாள். "சரி, மல்லிகாவுக்கு வாய்த்திருக்கும் புருஷனின் லட்சணத்தைத்தான் கொஞ்சம் சொல்லேன்?" என்றேன் நான்.

அவள் தன்னை ஒருவிதமாகச் சுதாரித்துக் கொண்டு, "அந்த அழகை எனக்குப் படம் வரைந்து காட்டத் தெரிந்திருந்தால் வரைந்து காட்டி விடுவேன். கல்ல கறுப்பு—கண்ணாடிக் கோலிகளைப்போல் கண்களை உருட்டி உருட்டி விழிப்பதைப் பார்த்தாலே எனக்குப் பயமா யிருக்கிறது. மூக்கு இருக்கிற இடமே தெரியவில்லை. சிங்கத்திற்குக் கடைவாய்ப் பல் நீண்டிருப்பது போல் கீழ் உதட்டுக்குக் கீழே வெற்றிலைக் காவி ஏறின பல் வந்து தொங்குவதுபோலிருக்கிறது. பேசுவதோ கர்ண கடூரம்—குகைக்குள்ளே இருந்து ராட்சதன் உறுமுறப்போல பேச்சு, மாமா! என்ன இருந்தாலும் மல்லிகா இவ்வளவு துரதிருஷ்டசாலியாய் இருக்க வேண்டாம்!" என்று ஒரு பெரு மூச்சோடு முடித்தாள்.

"பாவம், மல்லிகா இதற்காக ரொம்ப துக்கப்படுவாள்!" என்று சொல்லி, நான் நீலாவின் முகத்தைப் பார்த்தேன்.

அதுதானே இல்லை! அவள் அதற்குள் தன் புருஷனைப் பற்றி எவ்வளவு பெருமை பேசிக் கொள்கிறாள், தெரியுமோ? அவருக்கு நாகப்பட்டினத்தில் மூன்று பங்களா இருக்கிறதாம். சமுத்திரம் போல நஞ்சையும் புஞ்சையு மிருக்கிறதாம். பாங்கியிலே லக்ஷக் கணக்கா பணம் இருக்கிறதாம். என்ன பெருமை தெரியுமா அவளுக்கு!"

"அவள் பெருமைப் பட வேண்டியதுதான்! பணம் கண்ணைக் குருடாக்கி விடும். குலத்தோடு குலம் ஒட்டாது, நீலா! பணத்தோடுதான் பணம் ஒட்டும்!" என்றேன் நான் புன்சிரிப்புடன்.

இந்தச் சமயத்தில் "நீலா!" என்று அக்கா உள்ளேயிருந்து கூப்பிட்டாள். "இதோ வரேனம்மா!" என்று சொல்லிக்கொண்டே ஓடிவிட்டாள் நீலா. (அடுத்த இதழில் முடியும்)

# சுதந்திர மாளிகை

ஜெயமணி

## 16. குடியரசு இந்தியா ஜனனம்

**இந்தியா என்ற பெயருடன் நம் நாட்டுக்குப் "பாரதம்" என்ற புராதனப் பெயரும் வழங்கப்பட்டு வரவேண்டும் என்று அரசியல் நிர்ணய மகாசபையில் தீர்மானிக்கப்பட்டது.**

**1950-ம் வருஷம் ஜனவரி மாதம் 26-ந் தேதி இந்த அரசியல் மகாசாஸனம் அமுலுக்கு வரவேண்டும் என்றும், அந்தச் சுப தினத்தி லிருந்து இந்தியா பூரண சுதந்திரக் குடியரசாகத் திகழ வேண்டும் என்றும் தீர்மானமாயிற்று.**

**ஜனாதிபதியின் சம்பளம்:**—இந்தியக் குடியரசுத் தலைவரின் மாதச் சம்பளம் பத்தாயிரம் ரூபாய் என்றும், கவர்னரின் மாதச் சம்பளம் ஐயாயிரத்து ஐந்நூறு ரூபாய் என்றும், ஆடிட்டர் ஜெனரலின் மாதச் சம்பளம் நாலாயிரம் ரூபாய் என்றும் நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றன.

எனினும், தற்போது மேற்படி பதவிகளில் உள்ளவர்கள் அவர்களுடைய பதவி காலம் முடியும் வரையில் இப்போது பெறும் சம்பளமே பெற்று வருவார்கள்.

**சமஸ்தானங்கள்:**—ஒவ்வொரு சமஸ்தானத்திலும் ராஜப்பிரமுகரும் ஜனப் பிரதிநிதிகளும் அடங்கிய ஒரு சட்டசபை இருந்து வரும். மைசூரில் மாத்திரம் அஸெம்பிளியும் கவுன்சிலுமாக இரண்டு சபைகள் இருந்து வரும்.

ராஜப்பிரமுகரின் அலவன்ஸ் முதலிய செலவுத் தொகைகளை இந்திய ஜனாதிபதியே நிர்ணயிப்பார்.

பொதுவாக சமஸ்தானங்களும் மாகாணங்களைப் போலவே கருதப்படும்.

சமஸ்தானங்களின் இராணுவம், இந்திய சர்க்கார் இராணுவத்தின் அம்சமாகவே இருந்து வரும்.

சமஸ்தானாதிபதிகளின் உரிமைகள், கௌரவ சின்னங்கள் முதலியவற்றிற்கு எவ்வித குந்தகமும் ஏற்படாது என்று உத்தரவாதம் அளிக்கப் பட்டிருக்கிறது.

**இந்தியன் ஸிவில் ஸர்வீஸ்:**—இந்தியர்களிடம் நிர்வாகம் மாற்றப்படுவதற்கு முன் இந்தியன் ஸிவில் ஸர்வீஸ் (ஐ. ஸி. எஸ்.) உத்தியோகஸ்தர்களுக்கு தேசத் தலைவர்கள் உறுதிமொழி கொடுத்ததற்கிணங்க, இந்த அரசியல் திட்டம் அமுலுக்கு வந்த பின்னரும் சம்பளம், பென்ஷன், லீவு முதலிய சகல அம்சங்களையொட்டியும் அவர்களுக்கு ஏற்கெனவே என்ன சௌகரியங்களும் வசதிகளும் இருந்தனவோ அவைகள் தொடர்ந்து அளிக்கப்பட்டு வரும்.

**விளம்பர, விற்பனை வரிகள்:** பத்திரிகைகளை வாங்குவதற்கும், விற்பதற்கும் அதில் பிரசுரிக்கப்படும் விளம்பரங்களுக்கும் வரிகள் விதிக்கும் அதிகாரம் இந்திய சர்க்காரைச் சேர்ந்தது என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

1951-ம் வருஷம் மார்ச்சு மாதம் 31-ந் தேதியிலிருந்து கீழ்க்கண்ட இனங்களுக்கு விற்பனை வரி விதிக்க மாகாண சர்க்கார்களுக்கு அதிகாரமில்லை:

மாகாணத்துக்கு வெளியில் வாங்கப்படும் அல்லது விற்கப்படும் சாமான்கள், இந்தியாவி லிருந்து ஏற்றுமதி அல்லது இறக்குமதியாகும் சாமான்கள், ஒரு மாகாணத்திலிருந்து மற்றொரு மாகாணத்துக்கு விற்கப்படும் சாமான்கள் முதலியவற்றிற்கு விற்பனை வரி விதிக்க மேலே குறிப்பிட்ட தேதியி லிருந்து மாகாண சர்க்கார்களுக்கு அதிகாரம் இல்லை.

ஜனாதிபதியினிடமிருந்து அங்கீகாரம் பெற்றாலன்றி, சமூக வாழ்க்கைக்கு இன்றியமையாத சாதனங்கள் என்று பார்லிமெண்டு பிரகடனம் செய்துள்ள சாமான்களுக்கும் விற்பனை வரி விதிக்க மாகாண சர்க்கார்களுக்கு அதிகாரம் இல்லை.

சமஸ்தானங்களுக்கும் இந்திய சர்க்காருக்கும் ஏற்பட்டுள்ள உடன்படிக்கைகள், ஒப்பந்தங்கள் முதலிய எதிலும் தலையிட

சுப்ரீம் கோர்ட் உள்பட எந்தக் கோர்ட்டுக்கும் அதிகாரம் இல்லை.

**இடைக்கால ஏற்பாடுகள் :** இந்த அரசியல் திட்டம் அனுஷ்டானத்துக்கு வருமுன் யார் ஆடிட்டர் ஜெனரலாகப் பதவி வகிக்கிறாரோ அவரே, அரசியல் திட்டம் அமுலுக்கு வந்த பின்னரும் அவருடைய பதவி காலம் முடியும் வரையில் அதை வகித்து வருவார்.

இப்போதுள்ள இந்தியா, மாகாண பப்ளிக் சர்விஸ் கமிஷன்கள் இந்த அரசியல் திட்டம் அமுலுக்கு வந்த பின்னரும் அவைகளின் பதவிகாலம் முடியும் வரையில் தொடர்ந்து இருந்து வரும்.

இந்த அரசியல் திட்டத்தின்படி ஜனாதிபதி (குடியரசுத் தலைவர்) தேர்ந்தெடுக்கப்படும் வரையில், தற்காலிகமாக அரசியல் நிர்ணய சபையே ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

தற்காலிகமாகத் தேர்ந்தெடுக்கப்படும் ஜனாதிபதியின் ஸ்தானம் எக்காரணத்தினால் காலியானாலும், தற்காலிகமாக ஏற்படும் பார்லிமெண்டு ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அவ்வாறு தேர்ந்தெடுக்கும் வரையில், இந்தியாவின் பிரதம நீதிபதி ஜனாதிபதியாக இருந்து வருவார்.

ஜனாதிபதி புதிய மந்திரி சபையை நியமிக்கும் வரையில், தற்போதுள்ள மந்திரிகளே இந்தத் திட்டம் அமுலுக்கு வந்த பின்னரும் தொடர்ந்து பதவி வகித்து வருவார்கள்.

மாகாணங்களில் புதிய அசெம்பிளிகள், கவுன்சில்கள் ஏற்படும் வரையில் தற்போதுள்ள மேற்படி சபைகளே அரசியல் திட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள கடமைகளைச் செய்து வரும். அச்சபைகளின் தலைவர்களும் தொடர்ந்து பதவிகளை வகித்து வருவார்கள்.

அரசியல் திட்டத்தின்படி புதிய கவர்னர்கள் நியமிக்கப்படும் வரையில், இப்போதுள்ள கவர்னர்களே தொடர்ந்து அந்தப் பதவிகளில் இருந்து வருவார்கள்.

அவ்விதமே மாகாணங்களிலும் சமஸ்தானங்களிலும் தற்போதுள்ள மந்திரிகள் தொடர்ந்து பதவிகளை வகித்து வருவார்கள்.

**[இந்தமாதம் ஒத்திவைக்கப்பட்டுள்ள அரசியல் நிர்ணய சபைக் கூட்டம் நவம்பர் மாதம் மறுபடியும் கூடும். அப்போது இந்திய அரசியல் மகா சாஸனம் மூன்றாவது முறையாக நிறைவேறி சுதந்திர இந்தியாவின் மாளிகைக்கு அஸ்திவாரமாக அமையும்.**

**மேற்படி சபையில் இரண்டாவது முறையாக நிறைவேறிய இந்தியா அரசியல் மகா சாஸனத்தில் முன்னூற்று எண்பத்தாறு ஷரத்துகளும் எட்டு ஷெட்யூல்களும் இருக்கின்றன.**

**அரசியல் சபை நூற்றேழு நாட்கள் கூடி விவாதித்து அவைகளை முடிவு செய்தது.**

**அரசியல் நிர்ணய சபை அங்கத்தினர்களின் அலவன்ஸ், சிப்பந்திகளின் சம்பளம் எல்லாம் சேர்ந்து இதுவரை ஒன்றரைக் கோடி ரூபாய் செலவாகியிருக்கிறது.]**

# காலக்ஷேபம்

### நல்ல கேள்வி !

**வக்கீல் :**—உமக்குப் பிரதிவாதியைப் பன்னிரண்டு வருஷமாகத் தெரியும் என்று சொல்லுகிறீர். சரி......உமது அநுபவத்திலிருந்து இதற்குப் பதில் சொல்லும்! அவர் பிறர் பணத்தை எடுத்து மோசடி செய்யக் கூடியவர்தானா?

**சாட்சி (தயக்கத்துடன்) :**—உம். அது எவ்வளவு பணமுங்க?

★

### இல்லை, இல்லை !

**பிரசங்கி :**—இந்த ஊரிலே மழை, பனி ஏதேனும் அதிகமாகப் பெய்ததோ? எல்லோரும் இருமுகிறார்களே!

**கூட்டத்தில் ஒருவர் :**—அதெல்லாம் இல்லே. உங்கள் பிரசங்கத்தை வியந்த ஜாடை காட்டுகிறார்கள்!

### அவன் யோசனை

**மாணவன் :**—ஒருவன் செய்யாத காரியத்துக்காக அவனைத் தண்டிக்கலாமா, ஸார்!

**உபாத்தியாயர் :**—கூடாது; ஏன்?

**மாணவன் :**—நான் வீட்டுக் கணக்குப் போடவில்லை!

★

### அப்படியா ?

**மனைவி :**—நான் காலேஜிலே படிக்கும் போது சமையல் செய்வதில் கெட்டிக்காரி என்று ஒரு நற்சாட்சிப் பத்திரம் வாங்கியிருக்கிறேனாக்கும்!

**கணவன்:**—அது இருக்கட்டும். இப்போது நீ இலையில் போட்டது என்ன?

**மனைவி :**—நீங்கள்தான் ஊகித்துச் சொல்லுங்களேன், பார்க்கலாம்!

**கணவன் :**—அப்படியானால், நீ காலேஜில் வாங்கின நற்சாட்சிப் பத்திரமேதானோ?

# சாம்புவின் சாமர்த்தியம்

எஸ்.வி.எஸ்.

கையெழுத் திட்டுக் கை நிறைய சாம்பசிவம் தன் சம்பளத்தைப் பெற்ற போது அளவு கடந்த சந்தோஷ மெய்தினான். ஆனால் அந்தச் சந்தோஷம் நீர்க் குமிழியின் வாழ்வைவிட வெகு குறுகிய காலமே நீடித்திருந்தது!

சம்பளத்தைப் பெற்றுக் கொண்டு காரியாலயத்தை விட்டு வெளியே வந்தபோது, "என்ன ஸார், மறந்து விட்டீர்களா?" என்ற குரல் வந்தது. திரும்பிப் பார்த்தான். தன் காரியாலயத்திலேயே இன்னொரு இலாகாவில் வேலை செய்யும் கணபதி வந்து கொண்டிருந்தான். அவனைப் பார்த்தவுடனேயே அந்த மாசம் இருபதாம் தேதி வாக்கில் கைமாற்றாகப் பத்து ரூபாய் கடன் வாங்கியது நினைவுக்கு வந்தது. அதைத்தான் கணபதி 'மறந்து விட்டீர்களா?' என்று சாருக்தாக நினைவுறுத்தினான்.

"சே, சே, மறப்பேனா ஸார்! காலை உங்களைப் பார்த்துக் கொடுத்து விடலாம் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். இன்றைக்கே உங்களைப் பார்த்து விட்டேன்......இந்தாருங்கள்" என்று தன் மணிபர்ஸிலிருந்து பத்து ரூபாய் எடுத்துக் கொடுத்தான். ஒரு கடன் தீர்ந்தது!

சாம்பசிவம் தினம் இடைவேளைச் சிற்றுண்டிக்குத் தன் காரியாலயத்துக்குப் பக்கத்திலிருந்த ஹோட்டலுக்குப் போவது வழக்கம். அங்கே அவன் கணக்கு வைத்துக் கொண்டிருந்தான். இன்றும் நேரே அங்கே தான் சென்றான். ஹோட்டலில் கணக்குப் பார்த்து அந்தக் கடனைத் தீர்க்க வேண்டுமென்ற எண்ணத்தோடு அல்ல. ஒரு கப் காப்பி சாப்பிட்டு விட்டு, தன் மனைவிக்கு ஏதாகிலும் இனிப்புப் பக்ஷணம் வாங்கிக்கொண்டு போய்க் கொடுத்து அவள் முகத்தில் இன்றாகிலும் சந்தோஷக் குறியைக் காண்போமே என்ற எண்ணத்தோடு தான் சென்றான்.

காப்பி குடித்து விட்டு, பொட்டணத்துடன் வெளியே வந்தபோது ஹோட்டல் முதலாளி "இன்னிக்கு என்ன ஷோக்குப் பிறந்து விட்டது?......ஓகோ! சம்பள நாளா!... அப்படியானால் நம்மையும் கவனிச்சு விடுங்களேன்!" என்று கையில் பேரேடு எடுத்துக் கொண்டார்.

ஹோட்டல் முதலாளி எமகாதகர் அல்லவா? முகத்தைப் பார்த்து விட்டு அகத்தை மட்டுமல்லாமல் மணிபர்ஸில் 'கல கல' என்ற சத்தத்திற்காகப் போட்டு வைக்கப் பட்டிருக்கும் சில்லாக் காசு முதற் கொண்டு அல்லவா எத்தனை என்று கண்டு பிடித்து விடுவார்!

"பதினொரு ரூபாய் பதின் மூன்றணா."

சாம்பசிவத்துக்குத் தேள் கொட்டினாற் போலிருந்தது. "அவ்வளவு ஆயிடுத்தா?" என்று அவன் வாய் தவறி வந்துவிட்டது.

"போன மாசம் சினேகிதர்கள் யார் யாரெல்லாமோ வந்திருந்தார்கள் போலிருக்கிறதே!" என்றார் ஹோட்டல் முதலாளி.

இதைக் கேட்டதும் ஹோட்டல்காரர் மதிப்பில் தான் குறைந்துவிடக் கூடாது என்பதற்காக, "ஆமாம், ஆமாம்...... அத்தனைபேர் வந்ததற்கும் இவ்வளவுதானா ஆகியிருக்கிறது? அப்படியானால் ரொம்ப குறைச்சல்தான்!" என்று சொல்லிக் கொண்டே, பத்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து வைத்தான்.

"இல்லை..." என்று முகத்தை வளைத்துக் கொண்டு, கெஞ்சும் பாவனையில் இழுத்தார் ஹோட்டல் முதலாளி.

"என்ன ஐயா! ஒரு ரூபாய் பதின் மூன்றணாதானே பாக்கி. அதை அடுத்த மாசம் கொடுக்கிறேன்."

"முழுக்கக் கொடுத்து விட்டால்தான் எனக்குச் சௌகரியமாக இருக்கும். இப்ப எல்லாம் எவ்வளவு கஷ்டம் தெரியுமா? பெரிய மனசு பண்ணி......"

"வெந்நீரைக் காப்பி என்று சொல்லிக் கொள்ளையடிக்கும் உங்களுக்கே 'கஷ்டம்' என்று சொன்னால், நாங்கள் படும் கஷ்டத்துக்கு என்ன பெயர் சொல்வது என்று தான் தெரியவில்லை. அதற்கு ஒரு பெயரைக் கண்டு பிடித்துச் சொல்லுங்கள். அன்றைக்குப் பாக்கியையும் தந்து விடுகிறேன்" என்று சொல்லி விட்டு விர்ரென்று கடையைக் கட்டினான்!

* * *

வீட்டுக்குப் போகும் வழியில் ஜம்புலிங்கம் செட்டியாருடைய ஜவுளிக் கடையிருந்தது. அவருக்குப் போன மாசமே ஒன்றும் கொடுக்கவில்லை. பொன் வைக்க

வேண்டிய இடத்தில் பூவாகிலும் வைக்க வேண்டும் என்பது போல் ஐம்பது ரூபாய் கடன் இருக்கிற இடத்தில் ஐந்து ரூபாயாகிலும் கொடுத்தால்தானே கடன் கொடுத்தவர்களுக்குத் திருப்தியாக இருக்கும்? ஆகவே ஜவுளிக் கடைக்குள் சாம்பசிவம் நுழைந்தான்.

"செட்டியாரைப் போன மாசமே பார்க்கவில்லே. அதனால்தான் இன்னைக்கு வந்தேன். மாசக் கடைசி நாள் இருக்கே, இது போனமாசத்திலேயும் சேரும்; வர மாசத்திலேயும் சேரும்!" என்று சொல்லிக் கொண்டே பதினைந்து ரூபாயை நீட்டினான்.

"என்னாங்க இது? பாக்கி அவ்வளவு வைத்துக் கொண்டு பதினஞ்சு ரூபாய் நீட்டுறீங்க இது கொஞ்சங்கூட நல்லா இல்லே......?" என்றார் செட்டியார் சற்றுக் கோபமாக.

இந்தமாதிரி சந்தர்ப்பங்களைச் சமாளிக்கச் சாம்பசிவனுக்கா தெரியாது?

"என்ன, செட்டியார்! ரொம்ப கோவிச்சுகிறீங்க. இந்தப் பதினைந்து ரூபாய் போனால் பாக்கி எவ்வளவு இருக்கிறது, பாருங்க!" என்றான்.



"மழை பெய்யாம லிருந்தால் தேவலே......!"

"அட! ஊரெல்லாம் மழைக்குத் தவம் கிடக்கிறார்கள். நீங்கள் என்னடான்னா?......"

"இன்னிக்குத்தான் ஒரு புதுக் குடை வாங்கினேன். அதை மழையிலே நனைக்க இஷ்டமில்லே!"

செட்டியார் பேரேடு புரட்டிப் பார்த்துவிட்டு, "இருபது ரூபாய்" என்றார்.

"இருபது ரூபாய்! என், செட்டியார்! இந்த ரூபாய் ஒரு பெரிய பாக்கியா? இந்த இருபது ரூபாய் வரவில்லேன்னா இந்த மாசம் உங்க கடையையே மூடவேண்டியதாகி விடுமோ?" என்று கோபமாகக் கேட்டான்.

"என்னாங்க, சாயங்கால வேளையிலே இப்படிப் பேசறீங்களே!"

"பின்னே என்ன? இருபது ரூபாய்க்கு இவ்வளவு பேசறீங்களே? வேணும்னா உங்க இருபது ரூபாயை இப்பொழுதே எடுத்தெறிஞ்சுவிட்டு, அந்த மனுஷனுக்கு எழுதிவிடறேன் காஞ்சிபுரமோ, சேலமோ வேறு எங்கே வேணுமோ அங்கே போய் வாங்கிக் கொள்ளுங்கள் என்று."

"யாருக்குங்க? என்னதுங்க?" என்று மிக்க ஆவலுடன் கேட்டார் செட்டியார்.

சாம்பசிவம் அலட்சிய பாவத்துடன், "அதுதான் ஐயா — அந்த மாமனார்க்காரன் எழுதியிருந்தான்! தன் பெண்ணுக்கு—என் மச்சினிக்கு—அடுத்த மாசம் பதினெட்டாம் தேதி முகூர்த்தம் வைச்சிருக்காம். அதற்கு ஐந்தாறு பட்டுப் புடவை எடுக்கவேண்டும். அதைச் சேலத்திலே போய் எடுப்போமா, காஞ்சிபுரம் போய் எடுப்போமா என்று எழுதிக் கேட்டிருந்தார். நான் சேலமும் போக வேண்டாம், காஞ்சிபுரத்துக்கும் போக வேண்டாம். பணத்தை அனுப்பி வையுங்கோ, நம்ம செட்டியார் கடையிலேயே வாங்கிக்கலாம். சாயத்துக்கும் உத்தரவாதம்; விலையும் சகாயம் என்று எழுதியிருந்தேன். எல்லாம் உம்மை நம்பித்தான். பரஸ்பரம் உபகாரம் செய்துகொள்ளவில்லேன்னா, மனுஷ ஜன்மம் எடுத்து என்ன பிரயோஜனம். நீரோ ஒரே அடியாக இருபது ரூபாய் கேட்கிறீர்! உமக்கும் கொடுத்துவிட்டு, அவருக்கும் எழுதி விடுகிறேன்" என்று ஒரு போடு போட்டான் சாம்பசிவம்.

"அப்படியெல்லாம் எழுதி விடாதீங்க. கல்யாண ஜவுளி நாமே சப்ளை பண்ணலாம். ஆனால் உங்களை இப்படி வற்புறுத்திக் கேட்டேனே என்று நினைக்கக் கூடாது. வியாபாரம் இப்ப எல்லாம் கொஞ்சம் மந்தம் பாருங்க. அதனால்தான்........."

"ஆமாம் ஐயா, ஆமாம்! அளவுக்கு மிஞ்சித் தின்னா மந்தமும் வரும், மாந்தமும் வரும். அந்தக் காலத்திலே இருபது ரூபாய் புடவையை நூற்றிருபது ரூபாய்க்கு விற்றீர் பாரும்! அதன் பலன்தான் இப்ப மந்தம்

வாழ்ருக்கிறது! ஆனால் எங்களுக்கு மந்தமும் மாந்தமும் கண்டது எப்பவோ சின்ன வயசிலே, நினைவு தெரியாத நாட்களிலேதான். அப்புறம் எல்லாம் ஒரே பசி. அது இன்னும் ஓயவில்லை" என்று சொல்லிவிட்டுக் கடையை விட்டுப் புறப்பட்டான் சாம்பசிவம்.

*　　　*　　　*

பிறகு பலசரக்குக் கடை, மருந்துஷாப், டாக்டர், 'கைமாற்று கால்மாற்று' என்று வாங்கிய இடங்களெல்லாம் பணத்தைக் கொடுத்து விட்டு வீட்டுக்கு வந்து சேர்ந்தான். தன் வரவை வெகு ஆவலுடன் எதிர்பார்த்திருந்த மனைவியிடம் ஹோட்டலிலிருந்து வாங்கி வந்த பொட்டணத்தைக் கொடுத்தான். முகத்தில் புன்னகை தவழ, "இன்னிக்கு சம்பளம் வாங்கியாச்சாக்கும்!" என்றாள்.

"ஆமாம், அதைப் பத்தி காலைக்குப் பேசிக் கொள்ளலாம். இந்தா கதம்ப மாலை! ராமர் படத்துக்குக் கொஞ்சம் வைத்து விட்டு, மிச்சத்தை உன் தலையில் வைத்துக் கொள்" என்று அன்போடு சொல்லி அவள் கையில் கொடுத்தான்.

*　　　*　　　*

மறு நாள் பொழுது விடிந்து, மணி எட்டு ஆகிவிட்டது. சாம்பசிவம் கண் விழித்துப் பார்த்தான். அன்றைய காலைப் பத்திரிகை தலைமாட்டில் கிடந்தது. படுக்கையைவிட்டு எழுந்திருந்ததும் அதை எடுத்துப் படிக்கத் தொடங்கிவிட்டான்.

கொஞ்ச நேரம் கழித்து அவன் மனைவி எட்டிப் பார்த்தாள். "என்ன பிரமாத யோசனையில் மூழ்கிவிட்டீர்கள். பல் கில் தேய்க்க வேண்டாமா? காப்பி கீப்பி குடிக்க வேண்டாமா?" என்றாள்.

"பல் கில், காப்பி கீப்பி எல்லாம் இருக்கட்டும். இந்தச் சமாசாரத்தைக் கேட்டாயோ? அமெரிக்காவில் எல்லாம் சினிமா பார்க்கணும்னு கடன் சொல்லி விட்டுப் பார்க்கலாமாம். மாதக் கடைசியில் பணம் கொடுத்தால் போதுமாம். இந்தமாதிரியெல்லாம் நம் சினிமாத் தியேட்டர்காரர்கள் பொதுஜன சௌகரியம் பண்ணக் கூடாதோ? இங்கே எல்லாமே மோசம்! நிஜமாகச் சொல்லு. நாம் சினிமாக்குப் போய் இரண்டு மாசத்துக்குமேல் ஆகவில்லை?"

"ஆமாம்!"

"அதனால் இங்கேயும் அந்த மாதிரி சௌகரியமிருந்தால்......"

## குறை இல்லை!



மனைவி:—நான் இரண்டு நாள் இல்லாதது உங்களுக்கு என்னமோ போலிருந்திருக்கும், இல்லையா?

கணவன்:—அப்படி ஒன்றும் நீ இல்லாதது போல் தோன்றவில்லை. ரேடியோவில் யாராவது வளவளவென்று பேசிக் கொண்டேயிருந்தார்கள்!

---

"அந்தமாதிரி சௌகரியமிருந்தால் மாசம் பூரா உழைச்சு வாங்கின சம்பளத்தை அப்படியே சினிமாத்தியேட்டரில் கொடுத்து விட்டுக் காலை வீசிக்கொண்டு வீட்டுக்கு நடந்து வருவீர்கள்."

இதற்குள் வாசலில், "ஸார், ஸார்" என்று குரல் கேட்டது. சாம்பசிவம் எழுந்து போய்ப் பார்த்தான். பேப்பர்காரப் பையன் நின்றுகொண்டிருந்தான்.

"என்னடா?"

"பில், ஸார்!"

"பில் அப்புறம் வாங்கிக்கோ."

"முதல் தேதி, ஸார்! இன்னிக்கே கொடுத்து விட்டீங்கன்னா உங்களுக்கும் சௌகரியம், எனக்கும் சௌகரியம்."

"அந்தச் சௌகரியம் எல்லாம் நேற்றோடு முடிஞ்சு போச்சு. இன்னிக்கிப் பணம் கட்டாயம் வேணும்னு நீ போட்ட பேப்பர், இரண்டு மாசத்துப் பழைய பேப்பர் இருக்கும். அதைக் கொண்டு போய்ப் போட்டு விட்டு, உன் பில் போக காலணா ஐந்தணா மிஞ்சினால் என்னிடம் கொண்டு வந்து கொடு. இன்றையச் செலவுக்கு ஆகும்!"

"என்ன?" என்று வியப்புடன் கேட்ட சாம்பசிவத்தின் மனைவி பிரமை பிடித்தவள் போல் நின்றாள்.

“ஆமாம்டி.”

“என்ன, நேற்று சம்பளம் வாங்கலையா?”

“சம்பளம் வாங்கி எல்லாருக்கும் கொடுத்தேன். கையில் ஒன்றுமில்லை.”

“என்ன எல்லோருக்கும் கொடுத்தீர்கள்? பால்க்காரனுக்குக் கொடுத்தீர்களா? தயிர்க்காரிக்குக் கொடுத்தீர்களா? நெய்க்காரனுக்குக் கொடுத்தீர்களா? வீடு பெருக்குபவளுக்குக் கொடுத்தீர்களா?

“இல்லை.”

“பின்னே — எல்லாருக்கும் கொடுத்ததாகச் சொல்லிக் கொண்டீர்களே.”

“தப்பு, எல்லோருக்கும் கொடுத்ததாகச் சொல்லிக் கொண்டது தவறு. ஏதோ ஒரு சிலருக்குத்தான் கொடுத்தேன். சரிதானே—” என்றான் சிரித்துக்கொண்டே.

“போதுமே — உங்க ஹாஸ்யம்! வீடு பற்றி எரியறச்சே எதற்கோ நெருப்பு கேட்டானும். அந்தமாதிரி யிருக்கு உங்க ஹாஸ்யமும், சிரிப்பும்.”

“ஆமாண்டி ...... ‘துக்கத்தின் எல்லையிலேதான் ஹாஸ்யம் பிறக்கிறது’ என்று ஒருத்தன் சொல்லியிருக்கிறான் தெரியுமோ?”

“ஆமாம், சொன்னான் சுரைக்காய்க்கு உப்பில்லைன்னு! உங்களுக்கென்ன கவலை? பால்க்காரனும் தயிர்க்காரியும், உங்களை வந்தா பணம் கேட்டுத் தொந்தரவு செய்யப் போகிறார்கள். நீங்கள் ஆபீசுக்குப் புறப்பட்டுப் போனப்புறம் அவர்கள் எல்லாம் வந்து என்னையல்லவா பிய்த்துப் பிடுங்கப் போகிறார்கள்! அதனால் இப்படியும் பேசுவீர்கள்; இதற்கு மேலும் பேசுவீர்கள்! என் கவலை உங்களை என்ன பண்ணப் போகிறது?” என்று கண்ணில் நீர் ததும்ப அழ ஆரம்பித்துவிட்டாள் அவனுடைய சகதர்மிணி.

“ஏண்டி! உன் கவலை என் கவலை இல்லையா? இத்தனை வருஷம் குடித்தனம் பண்ணியதில் உன் கவலையில் நான் கொஞ்சங்கூடப் பங்கு எடுத்துக் கொள்ளவில்லை என்பதுதான் உன் எண்ணமா?”

“ஏதோ தவறி சொல்லி விட்டேன். நீங்கள் தமாஷாகப் பேசினது எனக்குப் பிடிக்கவில்லை. அதனால் அப்படிப் பேசி விட்டேன். இந்தக் குடும்பத்தை நானா நிர்வகிக்கிறேன்? நீங்கள் அல்லவா நிர்வகிக்கிறீர்கள். பொம்மை ஒவ்வொரு சமயம் நாம்தான் கோபுரத்தைத் தாங்குகிறோம் என்று நினைத்துக்கொண்டு விடுமாம், அந்தமாதிரி நினைத்து விட்டேன். மன்னிக்கணும்” என்றாள்.

“மன்னிப்பும் கோர வேண்டாம், ஒன்றும் வேண்டாம்! பொம்மையும் கோபுரத்தைத் தாங்குவதாகப் பெருமிதத்துடன் நின்றால்தான் பொம்மையும் அழகாக இருக்கிறது; கோபுரமும் அழகாக இருக்கிறது. அதுபோல நீயும் அப்படி நினைக்கிறதில் தப்பு ஒன்றும் இல்லை; கவலைப்படாதே. பால்காரன் தயிர்க்காரிக்கெல்லாம் சாயங்காலம் எதாகிலும் ஏற்பாடு பண்ணுகிறேன்” என்று சொன்னான்.

• • •

அன்று சாயங்காலம் எங்கிருந்தோ நூறு ரூபாய் கடன் வாங்கி வந்து சாம்பசிவம் தன் மனைவியிடம் கொடுத்தான். அதைப் பெற்றுக் கொண்டபோது அவள் கண்களில் கண்ணீர் மல்கி நின்றது. உள்ளத்தில் பேருவகை பொங்கி வழிந்தது.

அன்றிரவு சாம்பசிவம் நிம்மதியாகத் தூங்கினான். அந்தத் தூக்கத்தில் சாம்பசிவம் ஒரு கனவு கண்டான். ஸ்ரீ ராமபிரான் அவன் முன் தோன்றி, “பக்தா! உன் சாமர்த்தியத்தைக் கண்டு மெச்சினோம். எத்தனை கடன்காரர்களை எந்த எந்த வகையில் எல்லாம் நீ சமாளித்தாய் என்பதைப் பார்த்து வந்தபோது ரொம்பவும் ஆச்சரியம் ஏற்பட்டது. உன் சாமர்த்தியத்தைப் பெரிதும் பாராட்டுகிறோம். உனக்கு என்ன வரம் வேண்டுமோ, கேள்!” என்றார்.

“சுவாமி! என் சாமர்த்தியம் ஒரு புறம் இருக்கட்டும்! எனக்குக் கடன் கொடுத்தவர்கள் எல்லாம் என்னிடம் நம்பிக்கை கடன் கொடுத்தார்கள். கடைசியாக இன்று காலை என் நண்பன் ஒருவனிடம் நூறு ரூபாய் கடன் வாங்கி வந்தேனே, அவன் எதை நம்பிக் கொடுத்தான்! நான் மாதந்தோறும் வேலை செய்து சம்பளமாகப் பெற்று வரும் அந்த நூறு ரூபாயை நம்பி அல்லவா? ஆகவே அந்த நூறு ரூபாய்க்கும் நான் வேலை செய்யும் கம்பெனிக்கும் அழிவில்லாமல் நீடூழி இந் நானிலத்தில் மேவச் செய்வாய்! இதுவே என் பிரார்த்தனை, ராமா!” என்றான்.

இதைச் சொல்லி முடித்தானோ இல்லையோ, அவன் கண்கள் தானே திறந்து கொண்டன. அவ்வளவும் கனவு என்பதை யுணர்ந்தான். “கனவில் கூட இந்தத் தரித்திரம் விடிந்து ஆனந்தமாகச் சுக போகங்களில் வாழவேண்டும் என்று கேட்கத் தோன்றவில்லையே!” என்று சாம்பசிவம் மிகவும் வருத்தப்பட்டான்.



# கனகா எங்கே?

**ஞானம்பாள்**

குடியிருக்க வீடு கிடைப்பதே குதிரைக் கொம்பாக இருக்கும் இந்த நாளில் யார் செய்த புண்ணியமோ ஆஸ்பத்திரிக்கு வட பாகத்தில் ஒரு வீடு கிடைத்தது. என் வீட்டுக்குப் பின் பக்கம் ரிடையர்ட் டாக்டர் ரகுபதியின் சிறிய வீடு இருந்தது. வீடு சிறியதுதான் என்றாலும் அழகாய் இருந்தது.

காலை ஏழு மணிக்கு என் கணவர் ஆஸ்பத்திரிக்குப் போனால் பகல் ஒரு மணி அல்லது ஒன்றரை மணிக்குத்தான் வீடு திரும்புவார். பகல் சாப்பாடானதும், சிறிது நேரம் இளைப்பாறிவிட்டுச் சாயங்காலம் நான்கு மணிக்குப் போனால் இரவு ஒன்பது மணி வரையில் அவருக்கு டியூடி. வேலைக்காரனின் உதவியால் வீட்டு வேலைகளை முடித்துவிட்டு நான் தனியாக உட்கார்ந்து ஏதாவது தையல் வேலை செய்வேன். தினசரிப் பத்திரிகைகள், கதைப் புஸ்தகங்கள் படிப்பேன். எவ்வளவு நேரம் தான் படிக்க முடியும், தைக்க முடியும்? மனதில் சலிப்பு ஏற்பட்டதும் பின் பக்கம் ஜன்னலண்டை போய் எதிர் வீட்டைப் பார்த்தபடி உட்காருவேன். அந்த எதிர் வீட்டுக் காம்பவுண்டில் டாக்டர் ரகுபதியின் மகள் கனகா எதையாவது படித்துக்கொண்டிருப்பாள். சில சமயம் மாடி வராந்தாவில் உலாவுவாள். என்னைப் பார்த்தால் முகத்தைத் திருப்பிக்கொண்டு உள்ளே போய் விடுவாள். அவளிடம் சிநேகம் செய்து கொள்ள வேண்டுமென்று எனக்கு ஆசை. ஆனால் அதற்குப் போதுமான தைரியம் எனக்குக் கிடையாது. டாக்டர் ரகுபதி வருஷக் கணக்காக உடம்பு சௌக்கியமில்லாமல் இருப்பதாகக் கேள்வி. வாத நோய் என்று சொல்லிக் கொள்கிறார்கள். வீட்டில் அவரும் அவருடைய ஒரே பெண் கனகாவும், வயதான ஒரு வேலைக்காரியும், ஒரு வேலைக்காரனும்தான் இருப்பதாகச் சொல்லிக் கொண்டார்கள்.

அன்று வெள்ளிக்கிழமை. இரவு ஒரு நோயாளியைப் பார்க்கப் பக்கத்துக் கிராமத்திற்குப் போய்விட்டுக் காலையில் திரும்பி வருவதாகவும் காலை ஏழரை மணிக்கு மோட்டாரை எடுத்துக் கொண்டு ஸ்டேஷனுக்கு வரும்படியும் என் கணவர் சொல்லி விட்டுப் போனார். நான் மறுநாள் காலை ஸ்டேஷனுக்குப்போய் ஒன்பது மணி வரையில் பிளாட்பாரத்தில் காத்திருந்து பார்த்தேன். கடைசியில் கோபத்துடன் வீட்டுக்கு வந்து விட்டேன். காப்பி சாப்பிடவும் மனமில்லை. காலைப் பத்திரிகையைப் பிரித்துப் பார்த்துக் கொண்டிருந்தபொழுது யாரோ கதவைத் தட்டிவிட்டு டிராயிங்ரூமில் நுழைந்தது தெரிந்தது.

அவள்தான் கனகா. நான் எழுந்து “வாருங்கள், எங்கே இந்தப் பக்கம்?” என்று கேட்டேன்.

நாலா பக்கமும் பார்த்துவிட்டு “உங்களுக்கு என்னைத் தெரியக் காரணமில்லை. நான் எதிர் வீட்டில் இருக்கிறேன். டாக்டர் ரகுபதி என் தகப்பனார். டாக்டர் வீட்டில் இருக்கிறாரா?” என்று கேட்டாள்.

“உங்களை எனக்குத் தெரியும். நீங்கள் தானே குமாரி கனகா? டாக்டர் இன்று வீட்டிலில்லை. ஒரு நோயாளியைப் பார்க்க நேற்று இரவு போனவர் இதுவரையில் வரவில்லை. உங்கள் வீட்டில் யாருக்காவது உடம்பு சரியில்லையா?”

“டாக்டரைக் கேட்டுச் சில சாமான்கள் வாங்கிப் போக வந்தேன். சரி, நான் போய்ப் பிறகு வருகிறேன். நீங்கள் டாக்டரின் மகள்தானே?”

“நானா? இல்லை, இல்லை. உங்களிடம் யார் அப்படிச் சொன்னது?” என்று கொஞ்சம் வெட்கத்துடன் கேட்டேன்.

“ஓஹோ! இப்பொழுது தெரிந்தது. நீங்கள் டாக்டரின் மனைவியா?” என்று புன்முறுவலுடன் கேட்டாள் கனகா.

நான் இலேசாகச் சிரித்தேன்.

"உங்களுக்கு என் வயதுதான் இருக்கும் போலிருக்கிறது. உங்கள் பெயரென்ன?"

கொஞ்சம் வருத்தத்துடன் "என் பெயர் ரேவதி" என்றேன்.

"சரி, நான் பிறகு வருகிறேன்."

"இல்லை உட்காருங்கள். காப்பி தயாராக இருக்கிறது. சாப்பிட்டுவிட்டுப் போகலாம். இன்று நான் தனியாகக் காப்பி சாப்பிட மனமில்லாததால் இதுவரை சாப்பிடவில்லை" என்றேன்.

போக எழுந்தவள் மறுபடியும் உட்கார்ந்து, "யாரையோ நினைத்துக் கொண்டிருந்ததில் காப்பி சாப்பிட மறந்துவிட்டீர்கள் போல் இருக்கிறது" என்று சொன்னாள்.

"இல்லை. நான் ஸ்டேஷனுக்குப் போய் விட்டுச் சற்று முன்தான் வீடு வந்தேன்" என்று சொல்லி அவளுக்குக் காப்பி கொடுத்தேன்.

வீட்டுக்குப் போகவேண்டுமென்பதைக் கனகா மறந்தே போய்விட்டாள். பல விஷயங்கள் பேசினாள். எங்களுக்கு முன்னால் இருந்த டாக்டர், அவர் மனைவி முதலியவர்களைப் பற்றி எல்லா சமாசாரமும் சொன்னாள். நான் பேச்சினிடையே, "நீங்கள் இன்னும் விவாகம் செய்து கொள்ளவில்லையா? ஏதாவது விசேஷமான காரணம் உண்டா?" என்று கேட்டேன்.

"இன்னும் வேளை வரவில்லை. இரு ஆத்மாக்கள் ஒன்று சேருவதுதானே உண்மையான விவாகம்? மனப் பொருத்தம் வேண்டாமா?" என்றாள்.

"நீங்கள் சொல்லுவது சரி. இருந்த போதிலும்......" என்று ஏதோ சொல்ல வாயெடுத்தேன்.

"லோகாசாரத்தை அனுசரித்து விவாகம் அவசியமென்றுதானே சொல்ல வந்தீர்கள்? நான் உங்களை ஒன்று கேட்கட்டுமா? ஒருவேளை நீங்கள் சொல்லும் பதிலே, நீங்கள் என்னைக் கேட்ட கேள்விக்குப் பதிலாகவும் இருக்கக் கூடும். நீங்கள் உங்கள் விருப்பப்படி விவாகம்செய்து கொண்டீர்களா? இந்த விவாக வாழ்க்கையில் நீங்கள் சந்தோஷமாக இருக்கிறீர்களா? உங்களிருவருக்கும் குறைந்தது பதினைந்து வயதாவது வித்தியாசம் இருக்கும்போலிருக்கிறதே!" என்றாள்.

எனக்குச் சிரிப்பு வந்தது. "விவாகம் என் விருப்பப்படி நடக்கவில்லை: என் பெற்றோர்களின் விருப்பப்படிதான் நடந்தது. இன்றுவரையில் நாங்களிருவரும் ஒருமனப்பட்டு, எல்லாவிதத்திலும் சந்தோஷமாகத்தான் இருக்கிறோம். அவருக்கு வயது அதிகம் என்ற எண்ணமே எனக்கு உண்டானதில்லை" என்றேன்.

"இரண்டாந் தாரமாக ஒருவருக்கு வாழ்க்கைப் படப் போகிறோம் என்று தெரிந்து கூட உங்களுக்கு வருத்தம் ஏற்படவில்லையா?"

"இல்லவே இல்லை."

கனகாவின் கண்கள் ஆச்சரியத்தால் விரிந்தன. "சரி, நான் போய்விட்டு நாளை வருகிறேன்" என்று சொல்லிவிட்டுப் போய் விட்டாள்.



அவள் வந்துபோன மூன்றாம் நாள் காலை டாக்டர் ரகுபதியின் வீட்டுக் கிழ வேலைக்காரி வந்து "அம்மா, இங்கே கனகம்மா வந்தாங்களா?" என்று கேட்டாள்.

"இங்கேயா? இல்லையே! ஏன்? என்ன சமாசாரம்?"

"ஒன்றுமில்லை. நேத்து சாயங்காலம் வெளியே போனாங்க, ராத்திரி திரும்பி வந்து சாப்பிட்டுவிட்டுப் படுக்கைக்குப் போய் இருப்பாங்க என்று நாங்க நினைத்தோம். ஆனால்

காலை எழு மணி ஆகியும் எழுந்து வராததால் அறையிலே போய்ப் பார்த்தோம். அங்கே காணும்" என்று சொல்லிவிட்டு அவசரமாகப் போய்விட்டான்.

காப்பி சாப்பிட உட்கார்ந்தவுடன் என் கணவர் டாக்டர் ரகுபதியின் பெண்ணைக் காணவில்லை என்றும், அவர் வீட்டில் ஒரே அமர்க்களமாய் இருக்கிறதென்றும் சொன்னார்.

"அடே அப்பா, காணாமல் போகப்பட்ட பெண் இல்லை அவள். அழகும் நல்ல குணமுமுள்ள பெண். எங்காவது போயிருப்பாள்" என்றேன்.

"உங்களிருவருக்கும் சிநேகமென்று தெரிகிறது?" என்றார்.

"சிநேகமில்லை. மூர்த்தாகான் காலை உங்களைத் தேடிக்கொண்டு வந்திருந்தாள். அப்பொழுது கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்தோம்."

"எதைப் பற்றிப் பேசினீர்கள்?"

"விசேஷமாக ஒன்றுமில்லை. சம்பந்தா சம்பந்த மில்லாமல் கேள்விகள் கேட்டாள். நீங்கள் அவளைப் பார்த்திருக்கிறீர்களா?"

"ஆம்; அவள் நேற்று என்னிடம் வந்து காயத்திற்குப் போட மருந்து வாங்கிக் கொண்டு போனாள்."

காப்பி சாப்பிட்டானதும் அவர் எழுந்து போய்விட்டார். அன்று முழுவதும் கனகாவைப் பற்றியே யோசித்துக் கொண்டிருந்தேன். எங்கே போய் இருப்பாள்? ஓடிப் போயிருப்பாளா? வீட்டில் வயது சென்ற வியாதியஸ்தரான தகப்பனாரின் நினைவு கூடவா அவளுக்கு இல்லாமல் போய்விட்டது? வயது வந்த பெண் இந்த மாதிரி வீட்டை விட்டுப் போவதால் பெயர் கெடும் என்ற கவலை கூடவா இல்லை?

2

மூன்றாம் நாள் காலை எழுந்து ஜன்னலைத் திறந்தேன். கனகா பூப்போட்ட பெங்கால் வில்க் புடவை கட்டிக்கொண்டு தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தாள். ஆழ்ந்த யோசனையில் இருப்பவள் போலக் காணப்பட்டாள்.

ஜன்னல் திறந்த சத்தம் கேட்டு அவள் துணுக்குற்று என்னைத் திரும்பிப் பார்த்தாள்.

"கனகா, நீங்கள் எப்பொழுது வந்தீர்கள்?" என்று கேட்டேன்.

## சும்மா பாடு!



"நாளைக்கு நான் ரேடியோவிலே பாடப் போறேன், மாமி!"

"நாளைக்கு ஏன்? சும்மா இன்னைக்கே பாடு!...... எங்க வீட்டு ரேடியோ வெறுமனே தான் இருக்கு!"

"இதோ, இப்பொழுதுதான் வந்து கொண்டிருக்கிறேன்!"

"எங்கிருந்து வருகிறீர்கள்?"

"ஆற்றுக்கு அக்கரையிலிருந்து" என்று புன்முறுவலுடன் சொன்னாள்.

"நேற்று நீங்கள் எங்கே போய்விட்டீர்கள்? உங்கள் வீடு ஒரே அல்லோலகல்லோலப் பட்டதே!"

"நீங்கள் என்ன நினைத்தீர்கள்? நான் காணாமல் போய்விட்டேன் என்றா?" என்று கேட்டுவிட்டுக் குறும்பாகச் சிரித்தாள் கனகா.

"காணாமல் போனீர்கள் என்ற எண்ணம் கனவில்கூட எழவில்லை. ஆனால்......"

நான் பதில் சொல்வதற்குள் அவள் வீட்டு ஜன்னல் கதவு திறந்தது. டாக்டர் ரகுபதி கவலை தோய்ந்த முகத்துடன் நின்றிருந்தார். கனகா உள்ளே போய் விட்டாள்.

அன்று சனிக்கிழமை. சாயங்காலம் காப்பி ஆனதும் நாங்கள் வெளியே போவ

தற்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கும் பொழுது டாக்டர் ரகுபதியின் வேலைக்காரன் ஒரு கடிதம் கொண்டு வந்து கொடுத்தான்.

அதைப் படித்துவிட்டு என் கணவர், "நீ போ; நான் இதோ வருகிறேன்!" என்றார்.

"ஏன், என்ன சமாசாரம்?"

"நம்மிருவரையும் அவர் வீட்டுக்கு வரும்படி எழுதியிருக்கிறார்."

"என்னையுமா?"

"ஆம். கனகாவின் சிநேகிதி யல்லவா நீ? வா, முதலில் அவர்கள் வீட்டுக்குப் போவோம்" என்றார் என் கணவர்.



"வாருங்கள், டாக்டர்! உங்களுக்குச் சிரமம் கொடுத்ததற்கு மன்னிக்க வேண்டும்" என்று சொல்லி எங்களை வரவேற்றார் டாக்டர் ரகுபதி.

"இதில் சிரமம் என்ன! நான் செய்யக் கூடிய உதவி இருந்தால் சொல்லுங்கள். வேலை அதிகமிருந்ததால் கொஞ்ச காலமாக உங்களை வந்து பார்க்க முடியவில்லை."

"உங்களுக்கு வேலை அதிகமென்று தெரியும். அவசியமானால் நானே கூப்பிட்டு அனுப்பி யிருக்க மாட்டேனா? வயதானவர்கள், நோயாளிகள், குழந்தைகள் முதலியவர்களுக்கு வெட்கம், சங்கோசம் தெரியாது."

அவர் சிரித்துக்கொண்டே டாக்டர் ரகுபதியின் பக்கத்தில் உட்கார்ந்தார். டாக்டர் ரகுபதி பின்புறம் திரும்பிப் பார்த்து "அம்மா, ரேவதி! பின் பக்கம் போய் உட்காராதே. இப்படி வந்து என் முன்னால் உட்காரு" என்றார்.

"நமஸ்காரம்" என்று சொல்லிவிட்டு அவர் காட்டிய ஆசனத்தில் உட்கார்ந்தேன்.

"ஏன், அம்மா! நீயும் கனகாவும் தோழிகள் தானே?"

"ஆமாம்; ஆனால் அவ்வளவு நெருங்கிய பழக்கம் இல்லை."

"இருந்தாலும் சம வயதுள்ள பெண்களுக்கு இடையில் ஏற்படும் பழக்கம் சாதாரணமாக இருக்காதென்று எனக்குத் தெரியும். முக்கியமாகக் கனகாவைப் போன்ற சுபாவமுள்ள பெண்களைப் பற்றிச் சொல்லுகிறேன். அவள் உன்னிடம் மனம் விட்டுப் பேசியிருப்பாளே!"

"விசேஷமாக அப்படி எதுவும் பேசச் சந்தர்ப்பம் ஏற்படவில்லை. ஆமாம், வீட்டில் கனகா இருக்கிறாளா?"

"காலைக் காப்பி ஆனதும் போனவள் இன்னும் திரும்பக் காணோம். கனகாவுக்கு தாயார் இல்லை. அக்கா, மன்னி என்று அவள் வயதுள்ளவர்களும் அவளைக் கவனித்துக் கொள்வாரு மில்லை. ஆகையால் நீ எனக்கு ஒரு உதவி செய்ய வேண்டும். எனக்கோ வயதாகிவிட்டது. அவளுக்கு விவாகம் செய்துவிட்டு நிம்மதியாகக் கண் மூடலாமென்று நினைத்தேன். அந்த ஆசை நிறைவேறாது போல் தோன்றுகிறது. இதோ பார், இந்தப் படத்தை! இந்தப் பையனுக்கு அவளை விவாகம் செய்து கொடுப்பதென்று தீர்மானம் செய்திருந்தேன். இதுவரையில் இவன் இங்கிலாந்தில் படித்துக் கொண்டிருந்தான். எல்லாம் தெரிந்திருந்தும் கனகா தான் போன போக்கே போய்க் கொண்டிருக்கிறாள். என் சொல்லைக் கொஞ்சங்கூடப் பொருட்படுத்தவில்லை. அவள் எங்கெல்லாம் போகிறாள் என்பதை அறிய முயற்சித்தால் 'அப்பா, கவலைப் படாதீர்கள். உங்கள் பெயருக்குக் களங்கம் ஏற்படும்படியாக உங்கள் பெண்ணாகிய நான் ஒரு நாளும் நடந்துகொள்ள மாட்டேன்' என்கிறாள். இன்று காலை இந்தப் பையனிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது. அவன் வேலை கிடைத்து ஜெய்ப்பூர் போகிறானாம். சீக்கிரம் முகூர்த்தம் வைக்கும்படி எழுதியிருக்கிறான். நீ கனகாவைச் சந்தித்து அவனைக் கல்யாணம் செய்துகொள்ளும்படி சொல்லவேண்டும்" என்று சொல்லிப் படத்தை என்னிடம் கொடுத்தார்.

ஒரு அழகிய திடதேகமுள்ள இளைஞனின் படம் அது. "கனகா வந்ததும் எனக்குத் தெரியப்படுத்துங்கள்" என்றேன்.

ஒரு வாரமாகியும் நான் கனகாவைச் சந்திக்கவில்லை. டாக்டர் ரகுபதியின் தேக நிலைகூடக் கவலைக்கிடமாக இருந்தது. சாயங்காலம் அவர் வீட்டிலிருந்து வந்த என் கணவர் "டாக்டர் ரகுபதி அதிக நாள் உயிருடன் இருக்கமாட்டார்" என்றார்.

"என்ன? கனகா வீட்டில் இருக்கிறாளா?"

"இருக்கிறாள்; வேண்டுமானால் போய்ப் பார்த்துவிட்டு வா."

நான் போனபொழுது டாக்டர் ரகுபதி தூங்கிக்கொண்டிருந்தார். கனகா அவர் தலைமாட்டில் ஒரு நாற்காலியைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். தூக்கமில்லாததால் அவளுடைய கண்கள் சிவந்திருந்தன. என்னைப் பார்த்ததும் மெள்ள எழுந்து வெளியே வந்தாள்.

"அப்பா எப்படி இருக்கிறார்?" என்று கேட்டேன்.

"ஒன்றும் சொல்ல முடியவில்லை. பயமில்லை என்று டாக்டர் சக்கரவர்த்தி சொல்லுகிறார். இப்பொழுதுதான் கண் அயர்ந்தார். உட்காருங்கள். இவ்வளவு நாட்களாக உங்களை இந்தப் பக்கம் காணவில்லையே!" என்றாள்.

அவளருகில் உட்கார்ந்தேன். "நீங்கள் வீட்டிலிருக்க மாட்டீர்களென்று நினைத்து வரவில்லை" என்று நான் சொன்னேன்.

"நான் வீட்டைவிட்டு எங்கும் போகவே இல்லையே! அப்படி எப்பொழுதாவது போனாலும்கூட அரை மணி ஒரு மணிக்குமேல் தங்குவதில்லை."

"நான் உங்களைச் சந்தித்துச் சில முக்கியமான விஷயங்கள் பேச வேண்டும்."

"என்னிடமா?" என்று கனகா ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"ஆமாம்."

"சரி, கொஞ்சம் இருங்கள். நான் போய் ஸ்நானம் செய்துவிட்டு வருகிறேன். நீங்கள் சொல்லப் போகும் விஷயம் எனக்குத் தெரியும். ஆனால் இப்பொழுது என் மனநிலை அதைப் பற்றி வாதிக்க இடம் தராது. இதோ என்னுடைய ஆல்பம் இருக்கிறது. இதைப் பார்த்துக் கொண்டிருங்கள்; இதோ வந்து விடுகிறேன்", என்று சொல்லி எழுந்துபோனாள் கனகா.

நான் ஆல்பத்தைத் திறந்தேன். அதில் வெவ்வேறு மாதிரியில் எடுக்கப்பட்ட கனகாவின் படங்கள் இருந்தன. இயற்கை காட்சியின் படங்களும் சில இருந்தன. அவை பார்ப்பதற்கு மிகவும் நன்றாக இருந்தன. உயிரில்லாத காகிதத்தின்மேல் அந்தச் சித்திரங்கள் உயிருள்ளவைபோலத் தோற்றமளித்தன. ஒவ்வொரு படத்திற்கும் அடியில் 'மனோஹர்' என்று சித்திரம் தீட்டியவரின் பெயரும் இருந்தது. அந்தச் சித்திரங்களுக்கு மத்தியில் மனோஹரின் படம் ஒன்றும் இருந்தது. கண்களைக் கவரும் அந்தச் சித்திரங்களைப் பார்க்கும் மகிழ்ச்சியில் நான் என்னையே மறந்து கற் சிலைபோல் உட்கார்ந்திருந்தேன். அப்பொழுது திடீரென்று அறையில் விளக்கு வெளிச்சம் ஏற்பட்டது. கனகா வந்து "இருட்டில்கூடப் பார்க்கும் சக்தி உங்களுக்கிருக்கிறதே!" என்றாள்.

"கனகா, உண்மையில் இந்த அழகிய சித்திரங்களைப் பார்த்து அதிலேயே மனம் லயித்திருந்ததால் இருட்டினதைக்கூட நான் கவனிக்கவில்லை. நான் மனதிற்குள் அந்தக் கலைஞனைப் பற்றியே கற்பனை செய்து கொண்டிருந்தேன்" என்று கொஞ்சம் வெட்கத்துடன் சொன்னேன்.

"கலைஞனைப் பற்றி கற்பனையா அல்லது கலையைப் பற்றிய கற்பனையா?" என்று கனகா புன்முறுவலுடன் கேட்டாள்.

"முதலில் கலைஞன் கலையின் பூஜாரியாயிருந்திருக்கலாம். ஆனால் பிறகு கலைஞனின் திறனைக் கண்டு மோகம் கொண்டு

## ஒத்தாசை!



"என்னப்பா, தீவட்டி பிடிச்சுண்டு வந்திருக்கே! சமுத்திரத்தைக் கொளுத்திவிடப் போகிறாயோ?"

"இல்லேங்க! உங்களுக்குத் திருடனைப் பிடிக்க ஒத்தாசையாயிருக்குமென்றுதான் தீவட்டி கொண்டு வந்தேன்!"

கலை தானே அவனுக்கு அடிமையாகி விடுகிறது. ஆகையால் இந்தச் சமயம் நான் கலையை அடிமை கொண்ட கலைஞனைப் பற்றித்தான் நினைத்துக் கொண்டிருந்தேன். உயிருள்ளவைகளைப்போல் காணப்படும் இந்தச் சித்திரங்களைத் தீட்டிய கலைஞன் உண்மையில் கை தேர்ந்தவன்தான்" என்றேன்.

அப்படியானால் "நீங்கள் கலையைக் காட்டிலும் கலைஞனுக்கல்லவா அதிக மகத்துவம் கொடுக்கிறீர்கள் போலத் தோன்றுகிறது?" என்றாள் கனகா.

"ஆமாம்; சிருஷ்டியின் ஒவ்வொரு அணுவிலும் கலை வியாபித்திருக்கிறது. ஆனால் அதன் மகிமையை, கலையின் மர்மத்தை அறிந்தவனால்தான் உணர முடியும். மனோகர் என்னும் இந்தக் கலைஞனை உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டேன்.

"தெரியும்; வாருங்கள், காப்பி சாப்பிடுவோம். அப்பா இன்னும் தூங்கிக் கொண்டுதானிருக்கிறார்" என்று சொல்லி என்னை அழைத்துச் சென்றாள்.

* * *

"கொஞ்ச நாளைக்கு முன் நான் உங்கள் வீட்டுக்கு வந்திருந்த பொழுது உங்கள் விவாகத்தைப் பற்றி உங்கள் தகப்பனார் என்னிடம் சொன்னார். அவர் இந்தப் படத்தை என்னிடம் கொடுத்தார். இவரை உங்களுக்குத் தெரிந்திருக்கு மென்று நினைக்கிறேன்" என்று சொல்லிக் கனகாவுக்கு முன்னால் அவள் தந்தை கொடுத்த அந்தப் படத்தை வைத்தேன்.

"இவரைத்தானே? நன்றாகத் தெரியும். உங்களிடம் அப்பா விஷயத்தை விவரமாகச் சொல்லவில்லை போலிருக்கிறது. இரண்டு வருடங்களுக்கு முன்னால் அப்பா என்னிடம் விவாகத்தைப் பற்றிச் சொல்லியிருந்தால் நான் மிகவும் சந்தோஷத்துடன் இவரை மணந்திருப்பேன். மணப்பது மல்லாமல் உலகிலுள்ள எல்லாப் பெண்களையும் விட என்னைப் பாக்யசாலி என்றும் நினைத்திருப்பேன். ஆனால் இன்றோ...அந்தப் பேச்சை விடுங்கள். இன்னொரு நாள் சாவகாசமாகப் பேசலாம்" என்றாள்.

காப்பி சாப்பிட்டானதும் கனகா எழுந்து நின்றாள். அவள் தகப்பனாரைப் பார்த்து விட்டு நான் வீடு வந்து சேர்ந்தேன்.

மறுநாள் காலை உலாவிக் கொண்டிருந்தேன். கனகா ஒரு யுவனின் கையைப் பிடித்துக் கொண்டு எனக்கு முன்னால் போவது தெரிந்தது. நான் ஒரு மரத்தின் மறைவில் மறைந்து கொண்டேன். நல்ல வேளையாகக் கனகாவும் என்னைப் பார்க்கவில்லை. நான் அவள் கண்களில் படாமலே வீடு வந்து சேர்ந்தேன். அன்று கண்ட அந்தக் காட்சியைப் பற்றி நினைக்க நினைக்க அவள் மீது வெறுப்புத்தான் உண்டாயிற்று.

அன்றிரவு ஒன்பது மணிக்கே மாரடைப்பினால் டாக்டர் ரகுபதி தம் உலக வாழ்வை முடித்துக் கொண்டார்.

## 3

ஒரு மாதம் கழிந்து ஒரு நாள் சாயங்காலம் கனகா என்னைப் பார்க்க வந்தாள். அப்பொழுது நான் முற்றத்தில் உட்கார்ந்து ஏதோ தைத்துக் கொண்டிருந்தேன்.

"வா, உட்கார் கனகா! சௌக்கியம் தானே?" என்று கேட்டேன்.

"சௌக்கியம்தான். நாளை எனக்கு விவாகம். நானே நேரில் கூப்பிட வந்தேன். நீங்களும் டாக்டரும் அவசியம் வரவேண்டும்" என்று அழைத்தாள்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. "மிகவும் சந்தோஷம். கட்டாயம் வருகிறோம். ஆனால் நீ உனக்குக் கணவராக வரப்போகிறவரைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லையே?" என்றேன்.

"நாளைக்கு நீங்கள் அங்கு வரும்பொழுது அறிமுகப் படுத்துகிறேன்" என்றாள்.

மறுநாள் நான் கொஞ்சம் நேரம் கழித்துத் தான் போனேன். கல்யாணம் முடிந்து விட்டது. கனகா காப்பி பலகாரத்திற்கு ஏற்பாடு செய்வதில் ஈடுபட்டிருந்தாள்.

"இன்றுதான் உனக்குக் கல்யாணமாயிற்று. நீ ஒருவித அலங்காரமும் செய்து கொள்ளாமல் இப்படிச் சுற்றிக் கொண்டிருக்கிறாயே. இப்படிவா, இன்று நான் உனக்கு அலங்காரம் செய்கிறேன்" என்றேன்.

"நான் செய்து கொள்ளும் அலங்காரத்தைப் பார்த்து மகிழக்கூடியவர் கண் குளிரக் கண்டு ஆனந்திக்க முடியாது. ஆகவே நான் அலங்காரம் செய்து கொண்டால் அது பரிகாசத்திற்கு இடமளிக்கும். ஆம்; தெளிவாகச் சொல்லுகிறேனே, என் கணவர் குருடர்" என்றாள்.

"குருடரா!" என்னைத் தூக்கி வாரிப் போட்டது. ஆச்சரியத்துடன் கனகாவைப் பார்த்தேன். பரிகாசம் செய்கிறாளோ என்று ஒரு கணம் நினைத்தேன்.

"வாருங்கள். அவரை உங்களுக்கு அறிமுகம் செய்து வைக்கிறேன்" என்று சொல்லி என்னைத் தன் தகப்பனாரின்

அறைக்கு அழைத்துச் சென்றாள். அந்த அறையில் விவாகத்திற்காக வளர்த்த அக்னி அப்படியே இருந்தது. டாக்டர் ரகுபதியின் படத்திற்குப் பூ மாலைகள் போடப்பட்டிருந்தது. அந்தப் படத்திற்கு அருகில் ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு மணமகன் தன் கையிலிருந்த புஷ்பச் செண்டுடன் விளையாடிக் கொண்டிருந்தான். கனகாவுடன் அன்று உலாவிக் கொண்டிருந்தவன் இவன் தான் என்று அறிய எனக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை.

கனகா அவனைத் தொட்டு, “இவள்தான் டாக்டர் சுகுமாரனின் மனைவி. என் தோழி. இவர்தான் என் கணவர் மனோஹர். இவரைத் தான் நீங்கள் முன்பே கற்பனைக் கண்களால் பார்த்திருக்கிறீர்களே!” என்றாள்.

“என்ன? இவர்தான் மனோஹரா?”

“ஆமாம். சந்தேகமே வேண்டாம். ‘கலைஞனின் திறனைக்கண்டு மோகங் கொண்ட கலை தானே அவனுக்கு அடிமையாகி விடுகிறது’ என்று தாங்கள் அன்றொரு நாள் சொல்லவில்லையா?” என்றாள். அவளுடைய குரலிலே பெருமிதமும் மகிழ்ச்சியும் தாண்டவமாடியது. நான் சொன்ன வாக்கியத்தைக் கொண்டே அவள் என் வாயை அடைத்து விட்டாள்.

“அவர் பிறவிக் குருடரல்ல. போன வருஷம் திடீரென்று பார்வையை இழந்து விட்டார். அதற்கு முன்பே நாங்கள் இருவரும் அறிமுகமாகி யிருந்தோம். எனக்குப் படம் எழுதுவதிலே அபார மோகம். என்னுடைய ஆல்பத்தில் இருக்கும் அநேக சித்திரங்களை, பார்வையை இழந்த பிறகு இவர் என் உதவியைக் கொண்டு பூர்த்தி செய்தார். இந்தச் சித்திரங்களுக்காக அவருக்கு அநேக நற்சாட்சிப் பத்திரங்களும் வெகுமானங்களும் கிடைத்திருக்கின்றன. கண்களை இழப்பதற்கு முன் எங்களுக்குள் ஏற்பட்ட அறிமுகம் அன்பாக பரிணமித்து விட்டது. அவருடைய வாழ்க்கைக்கு ஒரு ஊன்றுகோல் தேவை என்பதை உணர்ந்தேன். தகப்பனார் பார்த்து எனக்கு நிச்சயம் செய்திருந்தவரை மணக்க உலகத்திலே பெண்களுக்கென்ன குறைவு? ஆனால் கண்ணில்லாத ஒருவரை வாழ்க்கைத் துணையாகக் கொள்ள எந்த பெண்ணாவது இஷ்டப் பட்டு முன் வருவாளா? ஆனால் நான் சொல்வதைக் கேட்டு, நான் ஏதோ பெரிய தியாகம் செய்துவிட்டதாக நினைக்கக் கூடாது. இது ஜன்ம ஜன்மாந்தரத்தில் இரு ஆத்மாக்களுக்கும் உள்ள தொடர்பைக் காட்டுகிறது. முதலில் குருவின் உருவிலும், பிறகு கணவரின் உருவிலும் அவரை அடைந்த நான் என்னைப் பெரிய பாக்கியசாலி என்றே எண்ணுகிறேன்” என்று சொன்னாள் கனகா.

எல்லையற்ற அன்புடனும் ஆதரவுடனும் கனகாவைத் தழுவிக் கொண்டு “இவரைக் கணவராகத் தேர்ந்தெடுத்த உனக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்கள்! பகவான் உங்களிருவருக்கும் சந்தோஷமும் சுகமும் அருள வேண்டும்” என்று வாழ்த்தினேன்.

கலங்கிய கண்களுடன் என்னைப் பார்த்து, “இறக்கும் தறுவாயிலிருந்த என் தகப்பனாருடைய ஆசிர்வாதத்தையும் சம்மதத்தையும் கூடப் பெற்று விட்டேன். நான் கடைப் பிடித்திருக்கும் நெறியிலிருந்து, தர்மத்திலிருந்து, கடமையிலிருந்து தழுவாமலிருக்க இறைவன் அருள வேண்டும். நீங்களும் ஆசிர்வதியுங்கள்” என்றாள் கனகா.

## நல்ல சூடு



பெரியவன் (சோனியைக் கேலியுடன்):— என்னங்க? சோளக் கொல்லைப் பொம்மையைப் பார்த்திருக்கிறீங்களா?

இளைத்தவன்:— இல்லீங்க! ஐயனார் கோவில் பூதத்தைத்தான் பார்த்திருக்கிறேன்......!

# கம்பர் தரும் காட்சி

**டி.கே.சி.**

## 272 இரண்டில் ஒன்றைச் சொல்

**த**ச்சன் நளன், அணையைக் கட்டி முடித்தான்.

வானர சேனையோடும், தலைவர்கள் எல்லாரோடும் அணை மூலமாகக் கடந்து இலங்கை போய்ச் சேர்ந்தான் ராமன்.

போர் ஆரம்பிக்க வேண்டியது தான் பாக்கி.

ஆனாலும் ராவணனிடம் ஒரு தூதனை அனுப்பி, மனம் மாறி நேர் வழிக்கு வருகிறானா என்று பார்ப்பதுதான் உசிதம் என்று எண்ணுகிறான் ராமன்.

யாரை அனுப்புகிறது என்ற யோசனை வருகிறது:

மறுபடியும் அனுமனை அனுப்பலாம் தான். ஆனால் எதிரி என்ன எண்ணுவான்? "சரி சரி! இவனைத் தவிர்த்து வேறு யாரும் இல்லைபோல் இருக்கிறது" என்று எண்ணலாம்.

அப்படி எண்ணுவதற்கு இடம் கொடுக்கக்கூடாது என்ற முடிவைச் சொல்லுகிறான் ராமன்.

மாருதி இன்னும்செல் லின்,
  மற்றிவன் அன்றிவந் து
சாருநற் வலியார்இல் லை
  என்பது சாரும்அன் றே!
யாரினி ஏகத்தக் கார்:
  அங்கதன் அமையும்: ஒன் னார்
வீரமே விளைப்பரே னும்
  நீஇன்றி மீள்தல்வல் லான்.

[மாருதி இன்னும் செல்லின்: அனுமனே இன்னும் போவானானால்; மற்றிவன் அன்றி வந்து சாருநர் வலியார் இல்லை: இவனல்லாமல் நம்மிடம் தூதாக வருவதற்கு வீரராக எதிரியிடம் யாரும் இல்லை: என்பது சாரும் அன்றே: என்று அல்லவா எண்ணத் தோன்றும் ராவணனுக்கு; ஆகையால் அவனிடம் போகத் தக்கவர் யார்?—அங்கதன் அமையும்: அங்கதன் போனால் எல்லா விதத்திலும் பொருத்தமாய் இருக்கும்; ஒன்னார் வீரமே விளைப்பரேனும்: பகைவர்கள் ஏதோ ஒரு பொல்லாத வீரச் செயலைச் செய்தாலும்; நீதன்றி மீள்தல் வல்லான்: ஒருவாய் யாதொரு சேதமும் இல்லாமல் திரும்பக் கூடும் — அங்கதன். அங்கதன் வாலியின் மகன்.]

குறிப்பு:—ராமன் மறைந்து நின்று எய்திய அம்பால் வாலி கொல்லப்பட்டான் என்பது உண்மைதான். ஆனாலும் ராமனுடைய மனம் அது காரணமாக எவ்வளவோ இளகி வருந்தும் உற்றது.

வாலி ராமனிடத்தில் உள்ள இந்த அரிய பண்பைப் பார்த்து, தெய்வத்துக்கு மேலாகவே எண்ணினான் ராமனை. அப்படி எண்ணியதோடு நிற்கவில்லை. தன் செல்வப் புதல்வனை அங்கதனை உற்ற துணையாக வைத்துக் கொள்ளும்படி ராமனை வேண்டிக் கொண்டான்.

ராமனையே தந்தை, தாய், தெய்வம் எல்லாமாகக் கருதி நடக்கும்படி அங்கதனிடத்திலும் நயந்து சொன்னான்.

இந்த விதமாக, ராமனுக்கும் அங்கதனுக்கும் இடையே உள்ள உறவை அறிந்து கொள்ளுகிறோம்.

⁂

**எ**ல்லாம் சரியாய்ப் போய்விட்டது என்று ராமன் எண்ணி அங்கதனை அழைத்துச் சொல்லுகிறான்:

"பகைவரிடம் போய் இரண்டில் ஒன்றைக் கேட்டுவிட்டு வா!"

நன்றென அவனைக் கூவி,
  'நம்பிநீ நண்ணலார் பால்
சென்றிரண்(டு) உரையின்ஒன் றைச்
  செப்பினை திரி'என் றான்;
அன்றவன் அருளைப்பெற் ற
  ஆண்தகை, அலங்கல்பொற் றோள்
குன்றினும் உயர்ந்ததென் றான்
  மனநிலை கூறலா மோ.

[நன்று என அவனைக் கூவி: அங்கதனை அழைத்து: தம்பி நீ நண்ணலர்பால் சென்று: அரச குமாரனே, நீ பகைவரிடம் போய்; இரண்டு உரையின் ஒன்றைச் செப்பி மீள நீதி என்றான்: சொல்லவேண்டிய விஷயம் இரண்டு. அதில் ஒன்றைச் சொல்லி அவன் என்ன பதில் சொல்லுகிறான் என்று கண்டு திரும்பி வரவேண்டும் என்றான் ராமன்; அன்று: அந்தருணம்; அவன் அருளைப் பெற்ற ஆண்தகை: ராமனது கட்டளையை அங்கீகரித்துக் கொண்ட அங்கதனாகிய வீரனது: அலங்கற் பொற்றோள் குன்றினும் உயர்ந்ததென்றால்: மாலை அணிந்த தோள்கள் மலையை விட உயர்ந்து விட்டது (சந்தோஷத்தால்) என்று சொல்ல வேண்டும்—அப்படியானால்; மன நிலை கூறலாமோ: அவன் மனதில் உண்டான சந்தோஷத்தை எடுத்துச் சொல்ல முடியுமா?]

* * *

அங்கதனுக்குத் தன்னைத் தூதனாகத் தேர்ந்தெடுத்ததில் அளவு கடந்த சந்தோஷம்.

"அந்த ராவணனிடத்தில் சொல்ல வேண்டியது என்னவோ" என்று மிகப் பணிவுடன் கேட்கிறான்.

என்,அவற்(கு) உரைப்பதென் ன ;—
'ஏந்திழை யாளைவிட் டுத்
தன்உயிர் பெறுதல்நன் றோ,
அன்றெனில்த் தலைகள்பத் தும்
சின்னபின் னங்கள்செய் யச்
செருக்களம் சேர்தல்நன் றோ,—
சொன்னவை இரண்டின்ஒன் றே
துணிகெனச் சொல்லி'டென் றான்.

[என்: என்னவோ? அவற்கு உரைப்பது என்ன: ராவணனுக்குச் சொல்லவேண்டியது என்ன என்று கேட்கவும் ராமன் சொல்லுகிறான்; ஏந்திழையாளை விட்டுத் தன்னுயிர் பெறுதல் நன்றோ: பெண்ணாகிய சீதையை விடுவித்துத் தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளுவது லாபகரமான காரியமா; அன்றெனில்: அல்லாத பக்ஷம்; தலைகள் பத்தும் சின்ன பின்னங்கள் செய்யச் செருக்களம் சேர்தல் நன்றோ: தலைகள் பத்தையும் தாறுமாறுமாய் வெட்டித் துண்டங்களாக ஆக்க யுத்தகளத்துக்கு வருதல் லாபகரமான காரியமா; இப்படி நான் சொன்ன இரண்டில் ஒன்றை யோசித்து முடிவைச் சொல்லும்படி ராவணனிடம் சொல்லிவிடு என்றான் ராமன்—அங்கதனைப் பார்த்து.]

இனி அங்கதன் செய்த காரியத்தை வருகிற இதழ்களில் பார்ப்போம்.

# எதிர் வீட்டு மோஹினி

சுவாமி

அன்றுதான் புதிதாகக் குடிவந்த ஓவர்சியர் வீட்டு வாசலில் ஒருத்தி வந்து நின்றாள். ராமமூர்த்தி அப்போதுதான் ஜன்னலைத் திறந்து வெளியே பார்த்தான். புதிதாக வந்திருக்கும் அவளைக் கொஞ்சம் உற்றுப் பார்த்தான். நல்ல சிவப்பு. ஒடித்துக்கட்டிய உடல். அவள் உடுத்தியிருந்த பச்சைப் புடவை அவளை இன்னும் அழகு படுத்தியது. புதிதாக வந்திருக்கும் ஓவர்சியரின் பெண்ணாக இருக்கவேண்டும் என்று தீர்மானித்துக்கொண்டு உள்ளே சென்றான்.

சிறிது நேரம் கழித்து ராமமூர்த்தி மறுபடியும் ஜன்னலுக்கு வந்தான். அவளும் நின்றுகொண்டிருந்தாள். இந்த முறை ராமுவின் கண்கள் ஆச்சரியத்தோடு அவளை நோக்கின. சிறிது நேரத்துக்குமுன் பச்சைப் புடவை அணிந்திருந்த அவள் இப்போது சிவப்புப் புடவை அணிந்திருந்தாள்! மணிக்கொரு முறை உடை மாற்றும் அவளைப் பற்றிச் சிந்தித்தவண்ணம் உள்ளே சென்றான் ராமமூர்த்தி.

பத்தரை மணியானதும் கையிலே "பிளாஸ்கை" எடுத்துக் கொண்டு ஆபீசுக்குப் போக வாசலுக்கு வந்தான் ராமு. அப்போதும் அவள் வாசலில் நின்றுகொண்டிருந்தாள்! சிவப்புப் புடவையை அகற்றி விட்டு மீண்டும் பச்சைப் புடவை அணிந்திருந்தாள் அவள். ராமமூர்த்தியால் நம்பவே முடியவில்லை. ஆச்சரியத்தோடு அவளை உற்று நோக்கினான். அவளும் அவனை ஒருமுறை பார்த்துவிட்டு உள்ளே சென்று விட்டாள்.

ராமமூர்த்தியின் சிந்தனை வாயு வேகத்தில் பறந்து சென்றது. இப்படிப்பட்ட பெண்கள் இருக்கும் வரை துணிப் பஞ்சம் எப்படித் தீரும்? வீட்டிலிருக்கும்போதே மணிக்கொரு உடைமாற்றும் இவள் வெளியே போவதானால் எப்படிப் போவாள்? இப்படிப்பட்ட ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து கொள்பவன் காலத்தை எப்படிக் கடத்துவான்?...... அவனது சிந்தனை எவ்விதமான முடிவுக்கும் வரவில்லை. ஏனெனில் சிந்தனை முடிவதற்குள் ஆபீஸ் வந்து விட்டது!

ஆபீஸ் வேலை முடிந்தும் முடியாததுமாக வீடு நோக்கி வந்தான் ராமமூர்த்தி. எதிர் வீட்டு வாசலில் அவளும் நின்றுகொண்டிருந்தாள்! ராமு நினைத்தது போலவே அப்போது அவள் வேறு உடை அணிந்திருந்தாள். காலேஜ் பார்டர் போட்ட வெள்ளைப்புடவை அவளது சிவந்த உடலை அலங்கரித்தது. சுமக்க முடியாத ஒரு பூ பாரம் அவளது தலையிலே சுமத்தப்பட்டிருந்தது.

ராமுவுக்கு வேடிக்கையாக இருந்தது அவளது போக்கு. போகும்போதும் வரும்போதும் அவளைப் பார்த்துக் கொண்டிருந்ததில் சில புதிய விஷயங்களைத் தெரிந்துகொண்டான் ராமு. அவளுடைய உடை மாறுவதுபோலவே குணமும் அவ்வப்போது மாறுவதை அவன் கவனித்தான். ஒருமுறை அவளைப் பார்க்கும்போது புன்னகை புரிகிறாள். மறுமுறை வேறு உடையில் காணும்போது முறைக்கிறாள்! விசித்திரமான அவளது போக்கு அவனுக்கு விளங்காத புதிராக இருந்தது. பச்சோந்திக்கு நிறம் மட்டிலும் அடிக்கடி மாறும். அந்த ரகத்தில் இவளைச் சேர்க்கலாமென்றால் குணம் வேறு மாற்றமடைந்து விடுகிறதே!

---

## பிழைப்புக்கு ஆபத்து!



நண்பர் (பிரம்மச்சாரி டாக்டரைப் பார்த்து):— ராமகிருஷ்ணய்யரின் மகள் சுசீலாவைப் பார்த்திருப்பீர்களே! உங்களுக்குச் சரியான பெண், அவள். அவளை நீங்கள் மணம் செய்துகொண்டால்.........

டாக்டர்:—அவ்வளவுதான்; என் பிழைப்பே தொலைந்து போகும். எனக்குப் பணம் அதிகமாகக் கொடுக்கும் நோயாளி அந்தப் பெண் ஒருத்திதான்!

மறு நாள் சாயந்திரம் ராமமூர்த்தி ஆபீஸ் வேலையை முடித்துக் கொண்டு "மெரினு பீச்சுக்கு"ச் சென்ருன். அவன் சிறிதும் எதிர்பாராத வகையில் "அவளும்" அங்கே ஓரிடத்தில் உட்கார்ந்திருந்தாள்! பெங்கால் சில்க் புடவை அவளை அப்போது அலங்கரித்தது. அவள் பக்கத்திலே ஒரு வயதானவர் உட்கார்ந்திருந்தார். ராமமூர்த்தியைக் கண்டதும் அவள் புன்னகை பூத்தாள். அவனும் பதிலுக்குப் புன்னகை புரிந்து விட்டுச் சற்றுத் தொலைவில் உட்கார்ந்து சிறிது நேரம் காற்று வாங்கினுன். பிறகு நேதாஜி ரோடு வழியாக வீடு நோக்கி நடந்தான்.

வழியில் குஜிலிக் கடை ஒன்றில் ஏதோ சாமான் வாங்கிக் கொண்டிருந்த "அவளை"க் கண்டதும் ராமமூர்த்திக்குத் தூக்கிவாரிப் போட்டது. அப்போது அவள் ஊதா நிறப் பட்டுப் புடவை ஒன்றைக் கட்டிக்கொண்டு யாரோ ஒரு நாகரிகமான வாலிபனுடன் நின்று கொண்டிருந்தாள்! ராமுவின் மனதிலே ஏதோ ஒருவிதமான திகில் வந்து பற்றிக் கொண்டது. மனதிலுள்ள திகிலை வெளிக் காட்டிக் கொள்ளாமல் அவளைப் பார்த்துப் புன்னகை புரிந்தான். அவள் பதிலுக்குச் சிரிக்கவில்லை. அவனை எரித்து விடுபவள்போல முறைத்தாள்!

ராமமூர்த்திக்கு ஒன்றுமே புரியவில்லை. கால் மணிக்கு முன் மெரினுவில் இருந்த இவள் அதற்குள் நேதாஜி ரோடுக்கு எப்படி வந்தாள்? அங்கே உடுத்தியிருந்த பெங்கால் சில்க் எங்கே? அதற்குள் வீட்டிற்குச் சென்று திரும்பி விட்டாளா என்ன? அப்படியே வந்தாலும் அப்போது சிரித்தவள் இப்போது ஏன் முறைக்கிருள்?

எண்ணற்ற கேள்விகள் அவனது சிந்தனையைக் குழப்பின. மோஹினி, அப்சரஸ் இவர்கள் மீது அவனுக்கு எப்போதுமே நம்பிக்கை கிடையாது. ஆனாலும் விதவிதமான ஜோடனையில் வந்து மனிதனை மயக்கும் சக்தி மோஹினிக்குண்டு என்று கேள்விப்பட்டிருக்கிருன். அப்படியானல் "இவள்" மோஹினியாக இருப்பாளோ என்று எண்ணினுன் ராமமூர்த்தி.

அவன் வீடு வந்து நுழையும்போது அவன் தங்கை சரசா தன் அம்மாவிடம் சொன்னுள்: "எதிர் வீட்டு மோஹினி கடற்கரைக்குச் சென்றிருக்கிருளாம்...!" அதற்குமேல் அவள் சொன்ன வார்த்தைகள் ராமுவின் காதுகளில் விழவில்லை. அவன் தலை சுழன்றது. மூச்சு நின்றுவிடும் போலிருந்தது அவனுக்கு. மோஹினி மீது நம்பிக்கையில்லாமல் இருந்த அவனுக்கு அப்போதுதான் மோஹினிமீது நம்பிக்கை பிறந்தது. அவனது நம்பிக்கையை ஊர்ஜிதம் செய்து கொள்ளும் நோக்கத்திலே அவன் வெளியே வந்து எதிர் வீட்டை நோக்கினுன். அவ்வளவுதான்!

பெங்கால் சில்க்கும், ஊதா பட்டும் ஒன்று சேர்ந்து எதிர் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தன! ராமமூர்த்தியால் நம்பவே முடியவில்லை. மீண்டும் அவன் மூர்ச்சையாகும் நிலையை அடைந்தான். அப்போது சரசாவின் பேச்சு தொடர்ந்தது: "எதிர் வீட்டு 'இரட்டைச் சகோதரிகளில்' மோஹினி தகப்பனுரோடு கடற்கரைக்குச் சென்ருளாம். மேனகா தன் கணவனுேடு நேதாஜி ரோடுக்குச் சென்ருளாம்......"

"அவர்கள் இரட்டை சகோதரிகளா?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தான். ராமமூர்த்தியின் முகத்தை அப்போது பார்க்க வேண்டுமே!

---

## சொர்க்கம் வேண்டாம்!



உபாத்தியாயர் :— பிள்ளைகளே! சொர்க்கத்துக்குப் போக ஆசையுள்ளவர்களெல்லாம் எழுந்திருங்கள்.

ஒரு பையன் மாத்திரம் எழுந்திருக்கவில்லை.

உபாத்தியாயர் (அந்தப் பையனைப் பார்த்து) :—ஏண்டா, மணி! உனக்கு மட்டும் சொர்க்கத்துக்குப் போவதற்கு ஆசை இல்லையா?

பையன் :—எங்க அம்மா பள்ளிக்கூடம் விட்டதும் நேராக வீட்டுக்கு வரச்சொல்லியிருக்கிருள், ஸார்!

தென்னிந்தியப் பத்திரிகையாளர் சம்மேளனத்தின் ஆதரவில்



## ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

அவர்களின் சங்கீதக் கச்சேரி

★

சங்கீத ரத்ன மைசூர் ஸ்ரீ டி. சௌடய்யா ... வயலின்
ஸ்ரீ கல்பாத்தி ராமநாதன் ... ... மிருதங்கம்
ஸ்ரீ டி. எஸ். வில்வாத்திரி ஐயர் ... ... கடம்

★

6-11-19 ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30 மணிக்கு
மவுண்ட் ரோடு ராஜாஜி ஹாலில்

"ஹிந்து" ஆசிரியர் ஸ்ரீ கே. ஸ்ரீநிவாசன் அவர்கள் முன்னிலையில் நடைபெறும்

டிக்கட்டுகள்: ரூ. 100, 50, 25, 10 & ரூ. 5

கிடைக்குமிடம்: சம்மேளனக் காரியதரிசி "ஹிந்து" ஆபீஸ் மவுண்ட் ரோடு, சென்னை
சம்மேளனக் காரியாலயம், 5-6, ஸ்ரீராமா பில்டிங்ஸ், மவுண்ட் ரோடு

வசூலாகும் தொகை பத்திரிகையாளர் சம்மேளனத்தின் கட்டிட நிதிக்குச் சேரும்

வி. கே. நரசிம்மன், காரியதரிசி

ஒலிபெருக்கி ஏற்பாடு: திருச்சி ரேடியோ சேல்ஸ் அண்டு சர்வீஸ்

# சிறந்த சலவை...



# உங்கள் (தேக) ஆரோக்கியத்தை

# பருகுங்கள்




இளைஞர் முதியோர் உள்பட குடும்பம் முழுவதற்கும் போர்ன்-வீடாவிலடங்கிய அபரிமிதமான விடமின்களும் கால்ஷியமும் அவசியமாகும். குழந்தைகள் இதன் சாக்லேட் மணத்தை விரும்புவர். காலையிலும் இரவிலும் சூடாகவோ அல்லது குளிர்ந்த பானமாகவோ இரண்டே இரண்டு தேக்கரண்டியளவை ஒரு கிளாஸ் பாலில் சேர்த்துப் பருகவும்.




—ஆரோக்கிய விருக்ஷம்—




CFV 3 TAM

## காட்பரீஸ்

# போர்ன்-வீடா

கால்ஷியமும், ஏ & டி விடமின்களும் நிறைந்தது

**காட்பரி-ப்ரை (இந்தியா) லிமிடெட்**

தபால் பெட்டி நெ. 1417 பம்பாய்; தபால் பெட்டி நெ. 251 கல்கத்தா; தபால் பெட்டி நெ. 1725 மதராஸ்

# விசேஷ தொழில் உபயோகங்களுக்கு





காஸ்டரோல் ஆயில் அளவு கருவிகளுக்குபாது காப்பு. ரப்பர் பூட்ஸிற்கு பள பளப்பூட்டுதல்...... வளையக்கூடிய உலோக குழாய்களுக்கான பெயின்டுகள்... தொழில்களுக்குகந்த உதிராத க்ரிங்கிள் (Crinkle) பினிஷ் பெயின்டு வகைகள்... இந்தியா டயரின் மேலுள்ள சிவப்பு வளையம்......... உலோகத்திற் செய்த மேஜை நாற்காலிகளுக்குகந்த நீடித்து உழைக்கும் கெட்டிப் பூச்சு......ரோட் ரோலர்களுக்கான சூடு தாங்கக் கூடிய பெயின்டுகள்— இவை ஷாலிமார் பெயின்ட் தயாரிப்புகளின் தொழில் முறையில் உபயோகப்படும் அநேக வகைகளில் ஒரு சில, எங்கள் யோசனையைக் கேட்டீர்களா?











# ஷாலிமார்

SPV 571M

**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.,**

Post Box 136, Madras 1. Importers & Distributors for Ceylon :
Lewis Brown & Co., Ltd., Post Box 85, Colombo

# பொது மக்களின் தேவை அதிகரிப்பை சமாளிக்க

# ஒரு புதிய 'ஆஸ்ப்ரோ' பாக்கிங்

ASPRO

3 வில்லைகள் 1½ அணா

இந்தியா முழுவதிலும் 'ஆஸ்ப்ரோ' வலிகளையும் ஜலதோஷத்தையும் சீக்கிரமாகவும் ஜுரமின்றியும் குணப்படுத்தும் மருந்தென பிரசித்திபெற்று வருகிறது. பொதுமக்களின் தேவை ஏராளமாக அதிகரித்து விட்டபடியால் அதை சமாளிக்கவேண்டி, 'ஆஸ்ப்ரோ' 1½ அணா சைஸ்களை இனி உறைகளில் வைக்காமல் தனித்தனி 'ஸீல்டைட்' துண்டுகளாகவே சப்ளைசெய்து விற்கப்படும். சுகாதார முறைப்படியும், வில்லைகளில் தூசியோ, ஈரமோ படாதபடி சீல் பாக்கிங்செய்யப்படும். இத்துண்டுகளின் பேரில் வர்ண எழுத்துக்கள் பொறிக்கப்படும். இது மிகவும் சௌகரியமான பாக்கிங். எல்லாவிடங்களுக்கும் எடுத்துச்செல்லலாம். எங்கும் உபயோகிக்கலாம். 'ஆஸ்ப்ரோ'வின் வலி நிவாரணசக்தி மாறவேயில்லை என்பதை மறந்து விடாதீர்கள். பாக்கிங் மட்டுமே மாறுதலடைந்துள்ளது.




## எடுத்துச்செல்லவும் உபயோகிக்கவும் சௌகரியமானது

அதே வலி நிவாரணம்
அதே சுத்தமானகுணம்
அதே வில்லை எண்ணிக்கை
அதே சுகாதாரமுள்ள ஸீலிங்
ஆனால் தனி உறைமட்டுமில்லை

## புதுவகை 3 வில்லைகளின் காட்சிப்பெட்டி

உங்கள் வியாபாரியிடம் இப்புதிய காட்சிப் பெட்டியை கவனித்துப்பாருங்கள். உண்மையான 'ஆஸ்ப்ரோ'வையே வாங்குகிறீர்களென்பதை உறுதிப்படுத்தும். இன்னும் கொஞ்சகாலத்திற்கு 'ஆஸ்ப்ரோ' கீழ்க்குறித்தபழைய உறைகளில் கிடைத்துக் கொண்டிருக்கும்.




ஒவ்வொரு 'ஆஸ்ப்ரோ' வில்லையின் பேரிலும் 'ASPRO' என்று தெளிவாக முத்திரையிடப்பட்டிருக்கும்







30 வில்லைகள் 15 அணா

டோஸ்: 1 முதல் 3 வில்லைகள்


இதோ உண்மையான
சிக்கனம்
சலவை ஸோப்பின் விலைக்கு
வாசனை ஸ்நான சோப்



# டி.எஸ்.ஆர். கோகுல் ஹேர் ஆயில்




டி.எஸ்.ஆர். கோகுல் கூந்தல் தைலம் அதன் அரிய வாஸனைக்கும் அபூர்வ குணத்திற்கும் பெயர் போனது. இது கூந்தலைகருகருவென்று நீண்டு வளரச் செய்வதோடன்றி, மூளைக்கு குளுகுளுப்பையும் அலாதி சுறுசுறுப்பையும் அளிக்கிறது.



**டி.எஸ்.ஆர். & கோ., கும்பகோணம்.**

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டு:
சுராஜ் ஏஜன்ஸீஸ்
157, லாயிட்ஸ் ரோடு, ராயப்பேட்டை, சென்னை

கோவை, பாலக்காடு ஜில்லாக்களுக்கு
சோல் ஏஜண்டுகள்:
B. பாலபட்டாபி செட்டியார்
246, வைசியாள் தெரு, கோயமுத்தூர்

வட ஆர்க்காடு ஜில்லாவுக்கு:
சேகர்ஸ், திருப்பத்தூர் (N. A.)

கோல்டன்

# பிளாட்டினம்

இங்கிலாந்தில் தயாரானது



விலை
**ரூ. 5/-**

## எத்தனை பெரிது — பேனாவின் மதிப்பு?

புதிய கோல்டன் ப்ளாட்டினம் பேனாவின் உழைப்பைக் கொண்டு மதிப்பை கணக்கிடுங்கள். இயந்திரத்தில் செய்த நிக்கல் சில்வர் மூடி...கருப்பு நிறத்தில் ஸ்ட்ரீம் லைன் பாரல். எல்லாம் ரெகுலர் மாடல்... தங்கத்தாலானது போன்ற ப்ளாட்டினம் முனையுடன்

கோல்டன்
**Platignum**
MADE IN ENGLAND

விற்பனை விவரங்களுக்கு சோல டிஸ்டிரிப்யூட்டர்கள்:
முல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்
பம்பாய், கல்கத்தா, மதராஸ், புது டில்லி

மைல் கணக்கில் முன்னேற்றம்

# புத்தப் புதிய டன்லப்

ஆர்.எச்.எஸ். ட்ரக் & பஸ் டயர்






DX 335 TAM

Edtited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119. Sladens Gardens, Poonamallee High Road, Kilpauk, Madras

# கோல்கேட்

சுவாசத்தையும் பற்களையும் சுத்தப்படுத்துகின்றது




**கோல்கேட் பவுடரோ அல்லது கிரீமோ உங்கள் இஷ்டப்படி வாங்கிக்கொள்ளலாம்**

★ உங்களது பற்களைச் சுத்தம் செய்வதுடன் உங்களது சுவாசத்தையும் சுத்தமாக்குகிறது.

★ கோல்கேட்டிலுள்ள மிருதுவான பளபளப் பூட்டும் பொருளானது எனுமலை மிக எளிதாகவும், கேடு விளைவிக்காமலும் பரிபூரணமாகவும், சுத்தப் படுத்துகின்றது.

★ கோல்கேட் ஒரு சிறந்த உயர் ரகப் பொருள். மிருகக் கொழுப்பு அற்றது.

★ பல் வைத்தியர்களால் சிபார்சு செய்யப்படுவது. விலை குறைவு - அதிக நாட்கள் வரும்.

COLGATE
RIBBON DENTAL CREAM

---

## இருமல், அவஸ்தையளிக்கும் ஆஸ்துமா, மார்ச்சளி 3 நிமிஷங்களில் ஒழிக்கப்படுகின்றன

ஆஸ்துமா, மார்ச்சளி தாக்குதலால் மூச்சுத் திணறி தூக்கமின்றி அவதியுறுகிறீர்களா? அதிகமாக இருமுவதால் பிராணாவஸ்தையாக இருக்கிறதா? பலஹீன உணர்ச்சியினால் வேலை செய்ய அசக்தராகவும், குளுமையான வஸ்துக்களையும் உணவுகளையும் சாப்பிட முடியவில்லையா?

எவ்வளவு நாட்களாக உபாதையுற்று எதை உபயோகித்திருப்பினும் சரி. மெண்டாகோ (Mendaco) ஓர் புதிய நம்பிக்கை அளிக்கும். மயக்க மருந்துகளில்லை. புகை பிடித்தலில்லை, இஞ்செக்ஷனில்லை, ஆட்டோமைசர் தேவையில்லை. செய்ய வேண்டியதெல்லாம் ருசியற்ற இரண்டு பில்லைகளை சாப்பாட்டின் போது உட்கொள்ள வேண்டியதே. உபத்திரவங்கள் மாயமாக மறைந்து விடும். மூன்றே நிமிஷங்களில் மெண்டாகோ (Mendaco) இரத்தத்துடன் கலந்து வேலை செய்யத் தொடங்கி, கபத்தைக் கரைத்து சிரமமின்றி ஸ்வாசத்தை அபிவிருத்தி செய்து முதல் நாள் இரவில் நல்ல நித்திரையை அளித்து விரைவில் பல வருஷங்கள் யௌவன உணர்ச்சியையும் பலத்தையும் பெறுவீர்கள்.

### 2 வருஷங்களாக ஆஸ்துமா இல்லை

மெண்டாகோ (Mendaco) அநேகமாக உடனே குணமளித்து ஸ்வாசத்தை இலகுவாக்குவது மட்டுமின்றி எதிர்கால தாக்குதல் ஏற்படாது செய்கிறது. உதாரணமாக ஜே. ரிச்சர்ட்ஸ், ஹாமில்டன், ஒன்ட், கானடா, இருமல் மூச்சுத் திணறலால் இரவு தூக்கமின்றி 40 பவுண்டு எடை குறைந்து, இறந்து விடுவார் என எதிர்பார்க்கப்பட்டது. மெண்டாகோ (Mendaco) ஆஸ்துமாவை முதல் நாளே நிறுத்தி விட்டது. இரண்டு வருஷங்களில் அவ்வுபாதையே மீண்டும் ஏற்பட்டதில்லை.

### பணம் வாபஸ் உத்தரவாதம்

மெண்டாகோ (Mendaco) முதல் வேளை சாப்பிட்டதுமே நேரடியாக ரத்தத்துடன் கலந்து ஆஸ்துமாவை ஒழிக்கிறது. மெண்டாகோ (Mendaco) அதிவிரைவில் வயதில் பல வருஷம் யௌவன உணர்ச்சி, பலம் இவற்றை அளிக்கிறது. வாபஸ் உத்திரவாதத்தின் கீழ் மெண்டாகோ (Mendaco) உபயோகித்துப் பார்த்து தீர்ப்பளியுங்கள். மெண்டாகோ (Mendaco) சாப்பிட்டபின் பூரண குணம் பெற்று, திருப்தி யளிக்காவிடில் வெற்றுப் பெட்டியை அனுப்பினால் முழுத்தொகையும் வாபஸ்செய்யப்படும். இன்றே மருந்து வியாபாரியிடமிருந்து மெண்டாகோ (Mendaco) வாங்குங்கள். இன்றிரவு எப்படித் தூங்குகிறீர்கள், மறுநாள் காலை எவ்விதமான தெம்புணர்ச்சி ஏற்படுகிறதென்பதையும் பாருங்கள்.

**Mendaco**
மெண்டாகோ

உத்தரவாதம் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது.

★ ஆஸ்துமா ★ மார்ச்சளி நோய் ★ ஹே ஜுரம் இவற்றை நிவர்த்திக்கிறது

REGD. NO. M. 4392